*Kumaraṉ*

*Āram 7, muttu 6*

*September 26, 1929*

Record no. 313

Reg. No. M. 1823. 24 பக்கங்கள். விலை 0-1-0

# குமரன்

The "KUMARAN" Published Every Thursday.

ஆரம் எ } காரைக்குடி சுக்கில-ஹு புரட்டாசி-மீ கக-உ வியாழக்கிழமை (26—9—1929.) { முத்திரை

# குமரன் புத்தகசாலை

## அடியிற் கண்ட புத்தகங்கள் குமரன் புத்தகசாலையில் விற்பனைக்குத் தயாராயிருக்கின்றன.

| | | | |
|---|---|---|---|
| கூனழகன் | 1—0—0 | சந்திரகுப்த சக்ரவர்த்தி சரித்திரம் | 0—6—0 |
| நமது பலசரக்குக் கடை | 0—10—0 | An Echo from and a mans | 1—0—0 |
| இல்வாழ்க்கையின் ரகசியங்கள் | 2—0—0 | இருநூறு பல சில்லரைக் கொத்து | 3—0—0 |
| மனோன்மணீயம் | 2—0—0 | ஞானவாசிட்டம் 1 & 2 | 6—0—0 |
| இராமகிருஷ்ண பரமஹம்ஸ திவ்ய சரித்திரம் | 2—0—0 | இராம நாடகம் | 2—0—0 |
| நைடதம் மூலமும் உரையும் | 4—0—0 | பெரிய விக்ரமாதித்யன் கதை | 2—8—0 |
| இந்தியாவும் சுய ஆட்சியும் | 1—8—0 | வேதாந்த ரகஸ்யம் (சுப்பிரமணிய சிவா) | 1—8—0 |
| விவேகானந்தரின் தற்கால இந்தியா | 0—10—0 | இகபர ஞானசாகரத் திரட்டு. | 0—8—0 |
| சிறு கதைகள் by கவிதாகூர் Part 3. | 0—12—0 | மங்கம்மாள் (நாவல்) | 1—8—0 |
| காந்தி சதகம் | 0—3—0 | சாணக்ய சாகஸம் | 1—4—0 |
| திருவள்ளுவர் திருக்குறள் (மணிமூவர் உரையுடன்) | 1—0—0 | வால்மீகி விஜயம் | 1—0—0 |
| தன்னம்பிக்கை | 0—8—0 | வைக்கம் வீரர் சொற்பொழிவு | 0—1—0 |

மானேஜர்,

குமரன் புத்தகசாலை, காரைக்குடி.

## வட்டிப்பிரகாசிகை.

நகரத்தார்களால் நன்கு பரிசீலனை செய்யப்பட்டு அங்கீகரிக்கப் பெற்றதும் மிகவும் எளிதில் வட்டிபார்க்கக் கூடியதுமான புத்தகம் இது ஒன்றே. கனம் ராஜா சர் அண்ணாமலை செட்டியாரவர்கள், ஜமீன்தாரவர்கள் சகோதரர் மகா-௱-ஸ்ரீ அள. அரு. வெள்ளையன் செட்டியாரவர்கள், திவான்பகதூர் பி. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் முதலிய பல தனவைசியப் பிரமுகர்களும் குமரன், ஊழியன், சிவநேசன் முதலிய பத்திரிகைகளும் கவர்ன்மெண்டு உயர்தர உத்தியோகஸ்தர்களும் இதன் உபயோகத்தையும் இது ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டிய அவசியத்தையும் பற்றி அபிப்பிராயம் வெளியிட்டிருக்கிறார்கள். இதில் ௩௨ நாள்வரை மாதாசி காலணா முதல் பத்து லக்ஷம் ரூபாய் வரை எந்த சில்வானமுள்ள தொகைக்கும் எந்த வட்டிவீதப்படிக்கும் வட்டி, நிரவல்வட்டி, தவணைவட்டி, பாங்க் வட்டி, அசல் ரெட்டிப்பு சரிநாள் பார்க்கும்விதம் முதலிய எல்லா விபரங்களும் அடங்கியிருக்கின்றன.

இவ்வளவு விபரங்கொண்ட இப்புஸ்தகம் தபாற்கூலியுள்பட ரூபாய் மூன்றுதான்.

நா. சு. லெக்ஷ்மணய்யர்,
வெள்ளையநூரணித் தெரு,
(603) தேவகோட்டை.

—

இனாம்.
(ஜோதிட ரகசியம்)

'மாருதி' என்ற மாதப் பத்திரிகையில் சோதிட சாஸ்திர ரகசியங்கள் பல வெளி வருகின்றன. உள்நாடு வருட சந்தா ரூ. 3—0—0 வெளிநாடு ரூ. 3—4—0 மாதிரி பிரதி இனாம் இன்றே எழுதுங்கள்.

(580) 'மாருதி' காரியாலயம்,
திருத்தணி
சித்தூர் ஜில்லா,
இந்தியா.

—



குறைந்த விலையில் அசல் சீமைக் கமலத் திருப்தியைக் கொடுக்கக்கூடியது

"ரேடியோ டைமண்டு"

கமலம் ஒன்றே. (ரிஜிஸ்டர் செய்யப்பட்டுள்ளது)

அதிக பணம் செலவிட்டு சீமை கமலங்களை வாங்குவதைவிட குறைந்த விலையில் பூரிப்பிலும், பிரகாசத்திலும், உருதியிலும, மற்றெல்லா குணங்களிலும் சீமை கமலத்திற்குப் பின்போகாத "ரேடியோ டைமண்டு" கமலங்களையே வாங்குங்கள் தற்பொழுது பல பெயர்களோடு உலவும் பல கமலங்களைக் கண்டு ஏமாறுதீர்கள். கியாரட் 1-க்கு விலை ரூ. 1-12-0 முதல் ரூ 3-8-0வரை கியாரட் 1-க்கு 7-க்குக் கீழ்ப்பட்ட சன்னம் கல் 1-க்கு 0-8-0. இதே கமலங்களிலும் அசல் புஷ்பராகம, இமிடேஷன் புஷ்பராகம், பட்டை சிகப்பு முதலிய கற்களாலும் தயார்செய்த எல்லாவித நகைகளும் கிடைக்கும்.

கேட்லாக் இனாம்.
ஸ்தாபிதம் 1905ம்௵
(569)

மோதி ஸ்ரீராமுலு செட்டி,
ஆபரணக் கற்கள் வியாபாரம், திருச்சினாப்பள்ளி

## கௌஹர்ஜான் காதல்.

இதுவே நாவலுலகில் தலைசிறந்த விளக்கத்தக்க நாவல் "கௌஹர்" என்றால் இந்நாவலுக்குத்தான் பொருந்தும். "ஜான்காதல்" என்னும் உயிர் காதலின் உண்மையை இதைப் படிப்பவர்கள்தான் உணர்ந்துகொள்ளுவார்கள். இதைக் கையிலெடுத்து வாசிக்கத் தொடங்கியதன்பின்னேதான் இதன் மகிமை உங்களுக்கு விளங்கும். இதுகாறும் இம்மாதிரியான நாவலை நீங்கள் வாசித்திருக்கமாட்டீர்களென்பது திண்ணம். பல கலர் ஆப்டோன் படங்களடங்கியது.

360 பக்கங்கொண்ட முதற்பாகம் விலை ரூ. 1—8—0 } வி. பி. வேறு.
380 பக்கங்கொண்ட இரண்டாம் பாகம் ரூ. 1—8—0 }

தாருல் இஸ்லாம் புக் டெப்போ,
(414) 73, தம்புசெட்டித் தெரு, தபால்பெட்டி 15, சென்னை.

தாதுபுஷ்டிக்கு நிகரற்ற

## ரத்தன் மிஸ்ரி அல்வா.

தாதுபுஷ்டிக்கு இதற்கு நிகரான ஔஷதம் எதுவுமில்லை இந்த மிஸ்ரி அல்வா அனேக மூலிகைகளாலும், உயர்ந்த கடைச் சரக்குகள் சேர்ந்திருக்கின்றன. தாதுபுஷ்டியில் மன்மதனுக்கு ஒப்பாவார். ஒரே வேளையில் பரீட்சிக்கலாம். எவ்வித பலயீனமும் போக சக்திக் குறைவு, நரம்பு தளர்ச்சி, தாது கஷ்டம், தரிசஸ்கலிதம், வீக்துடைவு, வேகவெட்டை, அசதி, மறதி, இடுப்புவலி, மூத்திரத்தில் சொட்டும் வித்து, சம்போகத்தில் பிரியமில்லாமை, சொற்பன ஸ்கலிதம், அனேக விதமான மேகவியாதிகள் முதலியவற்றை நீக்கி, இந்திரியத்தை மணிபோல் கட்டி நல்ல பசி உண்டாக்கும். உடனே ஆர்டர்களுக்கு முந்துங்கள். மிஸ்ரி அல்வாவை சாப்பிட உங்களுக்கு தாதுபுஷ்டியும், மற்ற சந்துஷ்டிகளும் கட்டாயம் உண்டாகுமென்று திடமாகச் சொல்லுவோம்.

| | | | |
|---|---|---|---|
| 1-பவுண் டின் விலை | ... ... ... | ரூ. | 5—0—0. |
| ½-பவுண் டின் விலை | ... ... ... | ரூ. | 2—8—0. |

கிடைக்கும் இடங்கள்:— ரத்தன்மிஸ்ரி டிப்போ,
ஆஞ்சநேய ஜோதிடாலயம், சௌடேஸ்வரி கோவில் வீதி, பெங்களூர் சிட்டி.
Wanted Agents in towns.

## கணித ஜோதிடம்.

பரகித கணிதப்படி கணிதஞ் செய்து பலன்கள் கூறப்படும். ஒரு வருஷத்திற்கு மாதவாரி பலன்கள் நுட்பமாயும் விவரமாயும் எழுதி அனுப்ப ரூபாய் இரண்டு. ஆருடம் 5 கேள்விகளுக்கு விவரமான பதில் எழுதி அனுப்ப ரூபாய் ஒன்று. விவாக விஷயம் ரூபாய் ஒன்று. விவாக விஷயத்தைப் பற்றி நாங்கள் எழுதி அனுப்புவதைக் கொண்டு பெண்ணுக்குப் புருஷனும் புருஷனுக்குப் பெண்ணும் இன்னாரென்று வெகு சுலபமாய் நிச்சயிக்கலாம். எங்களிடம் அருமையான பூர்வீக ஜோதிட நூற்கள் பலவுள்ளதால் நாங்கள் எழுதி அனுப்பும் பலன்கள் பொதுப் பலன்களாயிராமல் விவரமாகவும் சாஸ்திரீகமாகவுமிருக்கும். உங்கள் ஜாதக நகலாவது கடிதம் எழுதும் நேரத்தையாவது தெரிவியுங்கள்.

தே. ஆறுமுக செட்டி,
(568) முதலியார் பேட்டை, புதுச்சேரி.

—

வெகு விரைவாகக் குணத்தைக் கொடுக்கும். இது உறுதி!

தலைவலி,
வாதம்,
தொண்டைநோய்,
சளி,
இடுப்பு வலி,
நரம்புச்சுளுக்கு முதலிய
எவ்வித நோயானாலும்

## லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம்




உடனேயே சொஸ்தப் படுத்தும். 44 வருட உபயோகத்திலிருந்து சிறந்ததென ரூபிக்கப்பட்டு விட்டது குணத்தைக் கொடுக்கும்போது விலை மிகக்குறைவு. மிருகக் கொழுப்பில்லாதது. எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

(600)

சிவமயம்.


| வாரப் பதிப்பு | குமரன் | மாதப் பதிப்பு |
|---|---|---|
| சந்தா விபரம். | "என் கடன் பணிசெய்து கிடப்பதே" | சந்தா விபரம். |
| உள்நாடு வருடம் ஒன்றுக்கு ரூ. ௩-0-0 | | உள்நாடு வருடம் ஒன்றுக்கு ரூ. ௧-௮-0 |
| ஆறு மாதம் ௧-0-0 | | வெளிநாடு வருடம் ஒன்றுக்கு ௨-0-0 |
| பிரதி ௧-க்கு 0-௧-௬ | | தைமீ வருடாரம்பம் |
| வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. ௮-0-0 | | |

"கதரே உயிர்" "கருணையே தெய்வம்"


# நன்றி மறந்த நல்லான்.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை, பி. ஏ., பி. எல்.



(சென்ற வாரத் தொடர்ச்சி)

இன்னும் இலங்கைக் குத் தூதுவந்து குறும்பிழைத்த குரங்கினை இலங்கை வேந்தன் கொல்லப் பணித்தபோது அறநூல் வழி ஒழுகிய வீடணன், இடைநின்று தடை செய்து, "ஐயனே,

பகைப்புலன் அணுகி உய்த்தார்
பகர்ந்தது பகர்ந்து பற்றார்
மிகைப்புலன் அடக்கி மெய்ம்மை
விளம்புதல் விரதம் பூண்ட
தகைப்புலக் கருமத் தோரைக்
கோறலில் தக்கோர் யார்க்கும்
நகைப்புலன் பிறிதுண் டாமே
நம்குலம் நவையுண் டாமே"

என்று தூதருக்கு ஏதம் செய்தல் ஆகாதென்று எடுத்துரைத்தான். இச் செயலால் வீடணனது விழுமிய மனநல மறிந்த மாருதி, பின் இராமனிடம் இவ்வரக்கனது பண்பை எடுத்துரைக்க நேர்ந்தபோது "ஐயனே, இவ்வரக்கன் அறம் திறம்பாத அறிஞன். என்னைக் கொல்லுமாறு இலங்கைவேந்தன் பணித்த பொழுது,

மாதரைக் கோறலும் மறத்து நீங்கிய
ஆதரைக் கோறலும் அழிவு செய்யினும்
தூதரைக் கோறலும் தூயதன் றுமென
ஏதுவிற் சிறந்தன எடுத்துக் காட்டினான்"

என்று வீடணனது மனப் பண்பினை வியந்து புகழ்ந்தான்.

அறத்தினோ டுறவு பூண்ட இவ் வரக்கனது அகத்தின் செம்மை மற்றொரு முறையாலும் மாண்புற விளங்கும். அசோக வனத்திற் சிறையிருந்த திருமகளாய சீதையின் தோழியாய், வீடணன் திருமகளாய திரிசடை அமைந்திருந்தாள். அறிவினும் திருவினும் சிறந்த அந் நல்லாள் சீதையின் உயிர்த்துணையாய் அமைந்து அம் மங்கையின் ஆவிகாத்தாள் என்று கூறுவது மிகையாகாது. தலைவனை நினைந்து தளரும் தலைமகளைத் தக்க மொழிகளால் தேற்றியும், நிறையமைந்த மங்கையைத் தீண்டுவோனாயின், நிருதர்கோன் தலை வெடிக்கும் என்று முன்னமே எழுந்த மலரோன் சாபத்தை எடுத்துரைத்தும், அரக்கர் இழைத்த மாயத்தால் மயங்கி வருந்திய மங்கைக்கு மெய்ம்மை யுணர்த்தி மனம் தெளிவித்தும், சீதையின் சிறைவாசக் கொடுமையை ஒல்லும் வகையால் அகற்றினாள். திரிசடை யென்னும் தெய்வத்தையே துணைக்கொண்டு இரக்கமற்ற அரக்கர் நாட்டில் வாழ்ந்த திருமகள்

"அன்னைநீ உரைத்த தொன்றும்
அழிந்திலது ஆத லானே
உன்னையே தெய்மாக் கொண்டு
இத்தனை காலம் உய்ந்தேன்"

என்று இலங்கை நல்லாளை நோக்கிக் கூறும் இணையற்ற மொழிகளில், காலத்தினாற் செய்த நன்றியின் பெருமையும், செய்யாமற் செய்த நன்றியின் செம்மையும், இனிது விளங்கக் காணலாம். இவ்வாறு அசோக வனத்தில் அருந்தவம் செய்த ஒரு சடையின் துணையாய் திரிசடை அமைந்து ஆவி காத்த அருமையை,

"அன்னவன் தனிமகள்
அலரின் மேல்அயன்
சொன்னதோர் சாபம் உண்டு
உன்னைத் துன்மதி
நன்னுதல் தீண்டுமேல்
நணுகும் கூற்றென

என்னுடை இறைவிக்கும்
இனி தியம்பினள்"

என்று அனுமன் வீரனாய இராமனிடம் வியந்துரைத்தான். ஆகவே கற்புக் கடம் பூண்ட பொற்புடைய தெய்வத்தின் அருந்துணையாய் அமைந்த இலங்கை நல்லாள்,

"தக்கார் தகவிலர் என்பது அவர் அவர்
எச்சத்தாற் காணப்படும்"

என்னும் பொய்யா மொழிக்கோர் உயரிய சான்றாய் மிளிர்கின்றாள். 'மக்கள் அறிவு தந்தையறிவு' என்று மாநிலம் போற்ற வாழ்ந்த திரிசடையின் மனநலம் அவள் தந்தையின் செம்மையை இனிதுணர்த்துவதாகும்.

எஞ்ஞான்றும், நல்மனமும், நன் மொழியும், நற்செயலும் நன்மை விளைக்குமென்றும், தீய மனமும், தீய சொல்லும், தீய செயலும் தீமையே விளைக்குமென்றும் செம்மையாய் அறிந்த இலங்கை நல்லான், மலரோனிடம் வேண்டிப் பெற்ற வரம், அவனது மனப்பான்மையை இனிது விளக்குவதாகும். புலமை சான்ற புலத்தியன் மரபு விளங்க, மறை விளங்க இம் மாநிலத்தில் தோன்றிய மைந்தன், மலரோனைப் பணிந்து,

"நல்லாய் அறத்தைக் கைவிட்டு நடுங்கும் [இடும்பை வரினும் நான்
பொல்லாதன செய்யா தொழிக',

என்று விரும்பிப்பெற்ற வரத்தின் பெருமை அளவற்றதாகும். எவ்வகைத்தாய இடர் உறினும், நன்னெறி திறம்பித் தீ நெறியில் என்மனம் படரா தொழியுமாறு அருளவேண்டும் என்று வீடணன் விழைந்த வரம் விழுமியதாகும்.

'தீயவை தீய பயத்தலால் தீயவை தீயினும் அஞ்சப்படும்'' என்று தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் கூறியவாறு, தீவினைக்கு அஞ்சும் திறம் இந் நல்லன்பால் அமைந்திருக்கக் காணலாம். எவ்வுலகினும் நல்வினையே வெல்லும் என்றும் தீவினை தேய்ந்தொழியுமென்றும் இவ் வரக்கன் அடிப்படையாகக் கருதி வாழ்ந்தான்.

'அறத்தினைப் பாவம் வெல்லாதென்னும் [அதறிந்தும் ஞானத்
திறத்தின துறுமென்றெண்ணித் தேவர்க் [கும் தேவைச் சேர்ந்தோன்'

என்று வீடணன் கூறும் மொழிகள் அவனது விழுமிய சீலத்தை இனிதுணர்த்தக் காணலாம். அறமே அருந்துணையாவதல்லால் மறம் எக்காலும் மன்னுயிர்க்குத் துணையாக மாட்டாதென்றும், மறத்தால் எய்துவது மாறாப் பழியே யென்றும் இந் நல்லான் நன்றாய் உணர்ந்திருந்தான். இம் மனப்பான்மை,

"அறத்துணை யாவ தல்லால்
அருநர கமைய நல்க
மறந்துணை யாக மாயாப்
பழியொடும் வாழ மாட்டேன்"

என்று அவ் வரக்கன் கூறும் அறவுரையில் இனிதிலங்கக் காணலாம்.

இத்தகைய நல்லான் இலங்கை வேந்தனுக்கும், இராம வீரனுக்கும் நிகழ்ந்த இணையற்ற பெரும் போரில் தமையனைத் துறந்து, மாற்றாரைச் சேர்ந்த செயலை, ஒரு சாரார் போற்றியும் மற்றொரு சாரார் தூற்றியும் வருகின்றார்கள். அறநெறி திறம்பி பிறன்மனை நயந்த பேதையாய பெரியோனைப் பிரிந்து நன்னெறியாய் நின்ற நாயகனைப் பொருந்தி இலங்கை நல்லான் என்றும் அழியாப் புகழ் எய்தினன் என்பர் ஒரு சாரார். இலங்கை வேந்தன் சீரும் சிறப்பும் எய்தி அரசனாய் அமைந்தபொழுது அவன் அளித்த நலமெலாம் பெற்று இனிது வாழ்ந்து, அப்பால் அவ் வேந்தனுக்குப் பகை நேர்ந்த காலத்து செய்நன்றி மறந்து, செஞ்சோற்றுக் கடன் கழிக்கவும் கருதாது, இலங்கை அரசை எய்த விரும்பி, இராம வீரனுடன் சேர்ந்த விபீடணனது இழிதன்மை எக்காலும் மாறாப் பெரும்பழியாகும் என்பர் மற்றொரு சாரார். இதனை ஆராயு முன்னர் அக்காலத்தில் வீடணனுடன் வாழ்ந்த வீரரும் அறிஞரும் அச் செயலை எவ்வாறு கருதினார் என்றறிந்து கொள்வது அவசியமாகும். இலங்கைப் பெருவீரராய் விளங்கிய மேகநாதன், கும்பகர்ணன், இராவணன் ஆகிய மூவரும் தம் கருத்தைக் கரவாது வெளியிட்டுள்ளார்கள். மானமே உயிரினும் மாண்புடையதெனக் கருதும் மனப் பண்புவாய்ந்த மேகநாதன், நிகும்பலைப் போர்க்களத்தில் இளைய தந்தையாய வீடணனை எதிர்ப்பட்டபோது, நிகழ்த்திய வீரவுரை நெஞ்சைப் பிளப்பதாகும். 'எண்ணரிய தொகையினராய் இலங்கையில் வாழும் அரக்கரெல்லாம் அடலேறுபோல் அயல் வேந்தனுடன் பொருது அழியுங்கால், ஐயனே இவ் விலங்கைநாட்டில் எவர்க்கு அரசனாய் நீ ஆளப்போகின்றாய்?' என்று இளைய தந்தையை நோக்கி மேகநாதன் வினவும் முறை வீரம் செறிந்ததாகும்.

"நீருள தனையும் உள்ள
மீன்என நிருத ரெல்லாம்
வேருள தனையும் வீவார்
இராவண னொடு மீளார்
ஊருள தொருவன் நின்றாய்
நீயுளை உறைய நின்றொடு
ஆருளர் அரக்கர் நிற்பார்
அரசுவீற் றிருக்க ஐயா"

என்று வில்லாளிற் சிறந்த மேகநாதன் வினவுகின்றான். 'இலங்கையிலுள்ள அரக்கரெல்லாம் நீரில் அமைந்து வாழும் மீன்போல் இராவணனது ஆட்சியில் அமைந்து வாழ்கின்றார். நீரின்றி உயிர்வாழா மீன்போல், அரக்கர் இராவணனின்றி உயிர்வாழ இசையார். இவ்வாறு இலங்கைவேந்தனும் அரக்கரனைவரும் அழிந்து பட்டபோது, நீ எக் குடிகளுக்குத் தலைவனாய் இலங்கையை ஆள்வாய்?' என்று மேகநாதன் கூறும் வீரமொழிகளில் வீடணனையன்றி ஏனைய அரக்கரெல்லாம் செய்நன்றி மறவாச் செம்மை வாய்ந்தவர் என்னும் கருத்து இனிதிலங்கக் காணலாம். இன்னும் தேவரிற் சிறந்த திருமாலை வென்று கண்ணுதற் பெருமானது கயிலையை அசைத்து, மும்மைசால் உலகுக்கெல்லாம் மன்னனாய் விளங்கிய இராவணன் ஆண்ட இலங்கையைத் தன் பலமின்றி, மற்றொருவனது வில்வலம் கொண்டு ஆளுதல் எளிமையன்றோ? என்று மேகநாதன் கூறும் மொழிகள், மேகநாதம்போல் ஒலிப்பனவாகும்.

"முந்தைநாள் உலகம் தந்த
மூத்தவா னோர்கட் கெல்லாம்
தந்தையார் தந்தை யாரைச்
செருவிடைச் சாயத் தள்ளி
கந்தனார் தந்தை யாரைக்
கையிலையோடு ஒருகைக்கொண்ட
எந்தையார் அரசு செய்வது
இப்பெரும் பலம்கொண் டேயோ"

என்று தன்வலியின்றி அரசாளும் தகவின்மையை மேகநாதன் இடித்துரைக்கின்றான். இன்னும் இலங்கையை ஆளும் ஆற்றல் இன்றி, மற்றொருவனுக்கு அடிமையாய் வாழும் மானமற்ற வாழ்க்கையை மேகநாதன் மனமார வெறுக்கும் திறம் அறிதற்குரியதாகும்.

"பனிமலர்த் தவிசின் மேலோன்
பார்ப்பனக் குலத்துக் கெல்லாம்
தனிமுதல் தலைவனான
உன்னைவந்து அமரர் தாழ்வார்
மனிதருக் கடிமையாய் நீ
இராவணன் செல்வம் ஆள்வாய்
இனிஉனக் கென்றோ மானம்
எங்களோடு அடங்கிற் றன்றே"

என்னும் வீரமொழிகளில் மானம் என்னும் மணம் கமழக் காணலாம். 'இராவண மன்னனது இணையற்ற பெருஞ் செல்வம் எய்தி இன்புறும் ஆசையால் மானத்தை நீத்துப் பொன்விலங்கு பூண்டாற்போன்று மற்றொருவனுக்கு அடிமையாதல் ஆகுமோ? புலத்தியன் மரபிற் பிறந்த அரக்கர்க்கு மானமே மற்றெல்லாச் செல்வத்தினும் சிறந்ததாதலால், அஞ்சாது போர் புரிந்து இறக்கும் அரக்கரோடு, மானமும் வீரமரணமும் எய்திவிடும்', என்று இலங்கை வீரன் கூறும் மொழிகள் இணையற்ற பெருமை வாய்ந்தனவாம். இன்னும் அரக்கர் குலத்துப் பிறந்த பெண்கொடியின் மூக்கரிந்து மானம் குலைத்து, உற்றார் உறவினரை யெல்லாம் உலைவைத்து தோற்றொதுங்கி நின்ற கூற்றின் குலத்தை வெல்வித்து அரசாளும் பெருமை அருமைவாய்ந்ததன்றோ?' என்று மேகநாதன் கூறும்மொழிகள் உருக்கம் நிறைந்தனவாம்.

"சொல்வித்தும் பழித்தும் நுங்கை
மூக்கினைத் துணிவித் தோரார்
எல்வித்தும் படைக்கை யுங்கள்
தமயனை எங்க ளோடும்
கொல்வித்தும் தோற்று நின்ற
கூற்றினார் குலத்தை யெல்லாம்
வெல்வித்தும் வாழும் வாழ்வின்
பெருமையே விழுமி தன்றே"

என்று மேகநாதன் நிகழ்த்தும் மானவுரை மனத்தை நெகிழ்விப்பதாகும். 'தங்கையை மானபங்கம் செய்து, தமயனையும் தனயரையும் கொன்று காலனது குலத்தை மகிழ்வித்த பகைவனைத் தொழுது வாழும் பெருமை விழுமியதன்றோ?' என்று வில்லின் செல்வன் வினவுகின்றான். அஞ்சன வண்ணனது அழகிய திருமேனிக்கு அம்பிழைத்த[illegible] வன்பிழையாக் கொண்டு, மூக்கரிந்த மானத்தால் மனம் புழுங்காது, பாசமும் நேசமும் நிரம்பிய உற்றாரையெல்லாம் உடன்

# "எனது வாழ்க்கைக் கதை"

லாலா லஜபதிராய்.

அத்தியாயம் ௧௩.

தயானந்த கலாசாலை ஆரம்பிக்கப் பட்டபொழுது, அதற்குப் பொதுஜன ஆதரவு தேடவேண்டுமெனக் கொள்ளப்பட்டது. ஆரம்பத்தில் மற்றப் பள்ளிக் கூடங்களிலிருந்து மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். உயர் வகுப்புக்களில் சேர்வோருக்கு மற்றப் பள்ளிக்கூடப் பாடல்களே வைக்கப்பட்டன. ஆனால் அவர்கள் ஹிந்தியும் சமஸ்கிருதமும் படிக்கும்படி செய்ய வேண்டும் என முடிவு செய்யப்பட்டது. ஆரம்ப வகுப்புகளில் சேர்பவருக்கு ஹிந்தி மூலமே பாடங் கற்பிக்கப் படவேண்டும்; அவர்களுக்கு வடமொழி கட்டாய பாடமாக வைக்கப்படும்.

வடமொழியை எப்படிக் கற்பிப்பதென்பதைப் பற்றிப் பல விதமான அபிப்பிராயங்கள் தோன்றின. சுவாமி தயானந்தரின் புத்தகங்கள் கற்பிக்கப் படவேண்டுமென்றும், அவர் அமைத்த பாடமுறைப்படியே போதிக்கப் படவேண்டுமென்றும் பண்டித குருதத் கூறினர். லால் சந்தும் லாலா ஹன்ஸ் ராஜும் இதை எதிர்த்தனர். முதன்முதலில் எல்லாம் அமைதியாயிருந்தது. பண்டித குருதத் கட்சியாரின் சில ஆலோசனைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டன. பண்டித குருதத்தின் மரணத்திற்குப் பிறகு, கல்வி சம்பந்தமான விஷயங்களில் லாலா ராலாராம் அக்கட்சியின் தலைவராக வந்தார். லாலா முன்ஷிராமும் லாலா ராலாராமும், கலாசாலையிலும் கல்லூரியிலும் வடமொழி முதல் மொழியாக வைக்கப் படவேண்டுமென்றும், சுவாமி தயானந்தரின் கல்விமுறை ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமென்றும் வற்புறுத்தினர். ஆங்கிலத்தை இரண்டாவது மொழியாகவும், விரும்பினால் கற்கக்கூடிய மொழியாகவும் வைப்பதை லால் சந்தும், ஹன்ஸ் ராஜும் விரும்பவில்லை. கல்லூரியுடன் தங்களுக்கிருக்கும் தொடர்பை விடுக்கவும் அவர்கள் விரும்பவில்லை. இவ்வேற்றுமையும் நாளுக்கு நாள் வளர்ந்து வந்ததால், இப் பிரச்னையை யொட்டியும் ஆரிய சமாஜத்தில் பிளவு ஏற்பட்டது. இதனால், ஒவ்வொரு கட்சியும் தனக்குப்பலமேற்படுத்தமுனைந்தது. அச்சமயத்தில் லாலா ஹன்ஸ்ராஜ் கல்லூரிப் பிரின்ஸ்பாலாகவும், சமாஜத் தலைவராகவும் இருந்தார். பஞ்சாப் ஆரிய பிரதிநிதி சபாவுக்கும் அவர் தலைவாயிருந்தார். லாலா ஹன்ஸ்ராஜ் கட்சியாரிடமிருந்து சமாஜ நிர்வாகத்தை எடுத்துவிட வேண்டுமென லாலா முன்ஷிராம் கட்சியார் முயன்றனர்.

௧௮௯௨—ஏப்ரலில் நான் லாகூரையடைந்த பொழுது ஆரிய சமாஜம் மேற்குறித்த நிலையிலிருந்தது. நான் லாகூருக்குச் செல்லு முன்பே ௧௮௯௧ல், கல்லூரி நிர்வாகக் கமிட்டியின் கடிதமெழுதும் காரியதரிசியாக நான் நியமிக்கப்பட்டிருந்தேன். கல்லூரியின் சார்பாக நான் பிற சமாஜங்களுக்கும், அனுதாபிகளுக்கும் கடிதங்கள் எழுதுவது வழக்கம். ௧௮௯௨-ம் வருடத்து உத்தியோகஸ்தர் தேர்தலில் நான் அமைச்சராக நியமிக்கப்பட்டேன். எனவே, நான் லாகூர் சேர்ந்ததும் எனது வேலையை ஊக்கத்துடன் பார்த்துவந்தேன். பண்டித குருதத் இறந்துவிட்டார். எங்கள் கல்லூரி நாட்களிலிருந்தே நானும் லாலா ஹன்ஸ் ராஜும் பழகியிருக்கிறோம். காரியதரிசி யென்ற ஹோதாவில், லாலா ஹன்ஸ் ராஜ், லால்சந்த், ஈஸ்வரதாஸ் ஆகியவர்களுடன் நான் நெருங்கிப் பழகினேன். மற்றக் குழுவில், தூர்க்கப்பிரஸாதுடனும், பண்டித குருதத்துடைய சில நண்பர்களுடனும் பழக வேண்டியிருந்தது. சச்சரவில் கலக்காது நான் நடுநிலைமையிலிருக்க முயற்சித்துவந்தேன். ஆனால் கல்லூரி வகுப்பினர் பால் எனக்கு அனுதாபமிருந்தது. 'மகாத்மா' பிரிவினர் ஆமோதித்தபடி கலாசாலை, கல்லூரிப் பாட முறைகளைத் திருத்தவேண்டுமென்பதை நான் ஆமோதிக்கவில்லை. புலான்மமுத்தல் விஷயத்தில் நான் லாலா ஹன்ஸ்ராஜையே ஆதரித்தேன். இவ்விஷயம் அதிகமாக முக்கியப்படுத்தப்படக் கூடாதென்பது எனதபிப்பிராயம்.

௧௮௯௨—ம் வருடம் முற்றும் பெருங் கிளர்ச்சியாயிருந்தது. ௧௮௯௩-ம் வருட இறுதியில் லாலா ஹன்ஸ்ராஜ் தாமே சமாஜத் தலைவர் பதவியைத் துறந்து விட்டாரென எனது ஞாபக சக்தியை ஆதாரமாகக்கொண்டு கூறுகிறேன். தூர்க்கப்பிரஸாத் தலைமை வகித்தது, எரிகிற தீயில் நெய்யை வார்த்தது போல ஆயிற்று. அவருக்கு நிர்வாகத் திறமை கிடையாது; தலைமை வகிக்கும் குணங்களும் அவருக்கில்லை. அவர் தலைமை வகித்த காலத்தில் லாகூரிலுள்ள பிரசங்க மேடைகளெல்லாம் கட்சி நோக்கங்களை நிறைவேற்றவே உபயோகிக்கப் பட்டன. ஒருதடவை அவர் மேடையிலேறி நெஞ்சைத் திறந்து, தன்னை அடிக்கும்படி எதிர்க்கட்சியை அழைத்தார். நிர்வாகக் கமிட்டிக் கூட்டங்களெல்லாம் சிறிய அளவு போர்க்களங்களாகத் தோன்றின.

அவ்வருடமுற்றும் ஒவ்வொரு கட்சியாரும் தங்களுக்கு வேண்டிய பலத்தையே திரட்டிவந்தார்கள். புதிய அங்கத்தினர்கள் சேர்க்கப் பட்டனர்; பழைய அங்கத்தினர்களும் தங்கள் வாக்குரிமைக்கு இழுக்கு வரக்கூடாதென முழுவருட சந்தாவையும் ஒரே தடவையில செலுத்தி வந்தார்கள். சொற் பெருக்குகளி லெல்லாம் ஒருவருக் கொருவர் கடுமையாய்ப் பேசினார்கள். இவ் விஷயங்களில் எந்தக் கட்சியார் குறைந்த அளவு சிரத்தையெடுத்துக் கொண்டார்களென்பதைப்பற்றி நான் இங்கு விவரிக்க விரும்பவில்லை. ஆனால் லாலாஹன்ஸ்ராஜ் கட்சியார் சிறிது பெருந் தன்மையாக நடந்துகொண்டார்கள் எனமட்டும்குறிக்கமுடியும். அவ்வருட ஆரிய சமாஜ நிர்வாகக் கமிட்டிக் கூட்டங்களெல்லாம் நீண்ட நேரம் நடப்பது வழக்கம். மாலையில் ஆரம்பிக்கும் கூட்டம் நடுநிசி வரை நடப்பது முண்டு. அதற்கப்பாலும் சில முறை நடப்பதுண்டு. ஆத்மாராம், தோலாராம், கிடார்நாத் சீதாராம் ஆரியா, காலஞ் சென்ற ஜெயசந்த் ஜீவன்தாஸ் ஆகியோர் தூர்க்கப்பிரஸாத் கட்சித் தலைவர்களிற் சிலர். ராவ்சாகிப் பெய்யாராம் இக்கட்சியின் மூளையாகத் தோன்றினர். அவருக்குத் திறமையும், புத்தி நுட்பமும் இருப்பதை எவரும் சந்தேகித்த தில்லை. பேச்சில் அவர் ஞானி போன்றும், தேசாபிமானி போன்றும் தோன்றினர். அவரது குணமும் உயரியதாயிருந்தது. நிலப்பதிவுஇலாகாவில் முக்கிய உதவி டயாக்டராக அவர் அச்சமயம் லாகூரிலிருந்து வந்தார். ராய் மூல்ராஜைப் போன்று அவரது போக்கும் பிறருக்கு எட்டாததாகும். 'மகாத்மா' கட்சியாருக்கு அவர் ஒரு பெரிய தூண்போல் நின்றார். எஞ்சினீயர் ராம் லாதா ராப் ஸாஹ்னி என்பவர் அக் கட்சியில் முதன்மைபெற்று நின்ற மற்றொரு தலைவராகும். சமாஜத்தில் மிகுந்த பற்றுள்ளவர். நற்குணமும், விருந்தோம்புதற் குணமும், அவரிடம் பொலிந்து விளங்கின. ஆனால் அவர் எளிய மனம் படைத்திருந்தார். நிர்வாகத் திறமையும், கூரிய புத்தியும் அவர் படைத் திருந்தாரில்லை. புத்திநுட்பத்தைக்கொண்டு கட்சியைச் செலுத்தியவர் ராய்சாகிப் பெய்யாராம் ஆவர். எனினும் தூர்க்கப் பிரஸாத் எப்பொழுதும் அவரது யோசனைப்படி நடப்ப தில்லை. பிளவால் லாபம் பெற முயன்றவ ரெல்லாம் தூர்க்கப் பிரஸாதை பொம்மைபோல ஆட்டிவைக்கும் சக்திபெற்றிருந்தனர் ஒற்றுமைபேற்பட்டால் அவர்கட்குச் செல்வாக்கிராது.

சமாஜத்தின் நிர்வாகம் 'மகாத்மாக்கள்' கையிலிருக்க வேண்டுமென்றும், ஆனால் படித்தவர்களை வெளியில் தூத்திவிடக் கூடாதென்றும் ராய் பெய்யா ராம் விரும்பினர். படித்தவர்களுடைய செல்வாக்கையும், செல்வத்தையும், சக்தியையும் இழந்துவிடக் கூடாதென்பது அவரது கருத்து. இதனாலேயே ராய் மூல்ராஜை சமாஜத்தினின்றும் விலக்கிவிட வேண்டுமென்பதைப்பற்றி நிர்வாகக் கமிட்டி ஆலோசித்துக் கொண்டிருக்கும்பொழுது ராய் பெய்யாராம் அதைஎதிர்த்து படித்தவகுப்புக்குச் சாதகமாக வாக்களித்தார். இதனால் அந்தப் பிரேரணை தோற்கடிக்கப்பட்டது.

ராய் பெய்யா ராம் ஒரு அரசாங்க உளவன் என 'படித்த' வகுப்பார் நம்பியிருந்தனர். 'மகாத்மாக்க'ளும் ராய் மூல்ராஜை அவ்விதமே எண்ணினர். கவர்ன்மெண்டாருடைய உத்தாவின்பேரில் இவர்கள் சமாஜத்தைக் குலைக்க வேற்றுமையை உண்டுபண்ணுகிறார்கள் என ஜனங்கள் சந்தேகங் கொண்டனர். ராய் மூல்ராஜைப் பற்றிய எனதபிப்பிராயத்தைப் பின்னர் கூறுகிறேன். ராய் பெய்யா ராமைப் பற்றிய பொதுஜன சந்தேகம் உண்மையான ஆதாரமுடையதா என்பதைப்பற்றித் திட்டமாக ஒன்றும் என்னால் கூறமுடியாது.

ராய் பெய்யா ராம் அவ்வளவு படித்தவரல்ல; ஆனால் அவர் நல்ல மூளையுடையவர். அவரை நான் பன்முறை சந்தித்திருக்கிறேன். அவர் உயரிய குணம் படைத்தவர். நல்ல தோற்றமும் உடையவர். சமாஜ வேலைகளை நன்றாகக் கவனித்து வந்தார். மதுவையும் மாமிசத்தையும் விலக்கியவர்.

லாகூருக்குவெளியில் லாலா முன்ஷிராம்தான் பெரிய தலைவர். அவர் தமது வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதிக்கொண்டிருப்பதால் நான் அதை இங்கு விவரித்து எழுதவேண்டியதில்லை. ௧௮௯௨-௯௩-ம் வருடங்களில் நான் அவரைப்பற்றிக் கொண்ட அபிப்பிராயத்தை மிகுதியும் மாற்றிக் கொண்டேனென்பதை நான் இங்கு கூறுகிறேன். தீங்கிழைப்பவ ரென்றும், ஒற்றுமைக் குறைவை உண்டு பண்ணுகிறவரென்றும்,புகழ் விரும்புபவரென்றும், தலைவராக வேண்டுமென்னும் ஆசை பிடித்தவரென்றும் நினைத்திருந்தேன். கட்சி நோக்கங்களை நிறைவேற்றுதற்காக அவர் செய்த வேலைகளைக் கொண்டு இவ்விதம் முடிவுகட்டுவது நியாயமன்று என நம்புகிறேன். சகல பெரிய மனிதர்களைப் போன்று அவரிடமும் குறைபாடுகள் இருந்தன. வெறும் புகழுரை பாடுபவர்கள் இவற்றைத் தங்கட்குச் சாதகமாக்கிக்கொண்டனர். அவற்றைச் சதா சூழ்ந்திருப்பவர் அவரது அபிப்பிராயங்களையும், செயல்களையும் தங்கட்குச் சாதகமாக உபயோகித்துக் கொண்டனர். அவர் நிலையற்றவர்: அவரது அபிப்பிராயங்களை எளிதில் மாற்றிக்கொள்வார். புகழையும், ஆதிக்கத்தையும் அவர் முற்றும் வெறுத்தவர் என என்னால் கூறமுடியாது. பண்டித லக்பத்ராயையும், லாலா துவாரகதாஸையும் தவிர்த்து, சமாஜத் தலைவர்களில் அவ்விதம் வெறுப்புக் கொண்டவ ரெவரையும் வேறு நான் பார்த்ததில்லை. லாலா முன்ஷிராம் பிறரிடம் குற்றங் கண்டுபிடிக்கும் சுபாவமுடையவர். பிறருடைய குறைகளை எடுத்துக் கூறிக் கண்டிப்பது அவருடைய குணமாகும். எனினும், தீமை பயப்பவர் என்றோ, கொடியவரென்றோ கூறமுடியாது. கட்சிப் பிளவுகளாலேற்பட்ட ஆவேசத்தில் அவரைப்பற்றி நான் ஒருவிதமான அபிப்பிராயங் கொண்டிருந்தேன். பின்னர், அதை மாற்றவேண்டியதாயிற்று. அவ்விதமாக நான் அபிப்பிராயங் கொண்டதற்காகப் பெரிதும் வருந்துகின்றேன். லாலா முன்ஷிராம் பெருந்தன்மை பூண்டவர். உயரிய நோக்கங்கள் படைத்தவர். தயாள குணம் அவரிடம் உண்டு. ஊழியத்தை மதிப்பார். ஒரு கொள்கைக்காக வருந்தி உழைப்பதும், தியாகஞ் செய்வதும் என்னவென்பதை அவர் உணர்வார். தியாக உணர்ச்சி அவரிடம் மிகுந்திருந்தது. சிறந்த நண்பர். தூய மனமுடையவர். எதையும் வெளிப்படையாகக் கூறுவார்.

---

கோன்று அரசாளும் பெற்றி சாலச் சிறந்த தன்றோ? என்று உலகெலாம் கலக்கி வென்ற உயரிய வீரன் வினவுகின்றான். இன்னும் இலங்கைவேந்தனுய இராவணனது பொன்னார் திருமேனி போர்க்களப் பொடியில் படியும் கோலத்தை இளைய தந்தையின் கண்ணெதிரே எழுதிக் காட்டும் மைந்தனது மொழிகள் உள்ளத்தை உருக்குவனவாம்.

"எழுதிஎர் அணிந் திண்டோள்
இராவணன் இராமன் அன்பால்
புழுதியே பாய லாகப்
புரண்டநாள் புரண்டுமேல் வீழ்ந்து
அழுதியோ நீயும் கூட
ஆர்த்தியோ இவனை வாழ்த்தித்
தொழுதியோ யாதோ செய்யத்
துணிந்தனை விசயத் தோளாய்"

என்று மேகநாதன் குழைந்த மொழிகளால் கூறுகின்றான். திசை யானைகளின் வலியளித்த திண்ணிய தோள்கள், இராமனது அம்பால் அடியுண்டு புழுதியே பாயலாகப் படியும்பொழுது, 'ஐயனே நீ தமயனைக்கண்டு அழுவாயோ! அன்றிப் பகைவருடன் சேர்ந்து உள்ளக் களிப்பால் துள்ளி மகிழ்வாயோ? யாது செய்யத்துணிந்தாய் ஐயா?' என்று வீரன் கூறும் வீழுமிய மொழிகள் சோகம் நிறைந்தனவாம், ஆகவே உற்றார் என்றும் உறவினர் என்றும் பாராது, மானம் என்றும் ஈனம் என்றும் எண்ணாது, இலங்கையின் அளவிறந்த செல்வத்தை யெய்தும் ஆசையாலேயே, விபீஷணன் போர் முனையில் தமயனைத் துறந்தான் என்பது மேகநாதன் கருத்தாக விளங்குகின்றது.

(தொடரும்)

---





## மதிப்புரை.

### சுகாதார பாடங்கள்.

[இயற்றியவர்: வீரவநல்லூர் ஹிந்து செகண்டரி பாடசாலை உதவி ஆசிரியர் திரு. எம். எஸ். சுப்பிரமணியன் அவர்கள். விலை: முதல்புத்தகம் அணா ௩; இரண்டாம் புத்தகம் அணா ௬; மூன்றாம் புத்தகம் அணா ௩.]

சுகாதார பாடங்களின் மூன்று புத்தகங்களும் கிடைக்கப் பெற்றோம். பள்ளிக்கூடப் பாடமுறையைத்தழுவி இந்நூல் எழுதப்பட்டிருக்கிறது. சுகாதார விஷயத்தில் மிக மோசமான நிலையிலிருக்கும் தமிழ் நாட்டுக்கு இந்நூல் மிகவும் தேவையானது என்று கூறத் தேவையில்லை. இலக்கியக் கல்வியுடன் சுகாதாரப் பாடமும் மாணவர்களுக்குப் போதிக்கவேண்டியது அவசியமாகும். முதற் புத்தகத்தில் உணவு, மூச்சு, உடை, குளித்தல், வியாதிக் கிருமி, தொத்துநோய் முதலிய பல விஷயங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. தேகாப்பியாசம், தூக்கம், மலச் சிக்கல் முதலிய விஷயங்களைப்பற்றி இரண்டாவது புத்தகத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது புத்தகத்தில் இரத்த ஓட்டம், இருதய அமைப்பு, அஜீரணம், மதுபானம், நரம்பு, மூளை, தொத்துநோய்கள் முதலியவற்றைப்பற்றிய கட்டுரைகள் அடங்கியிருக்கின்றன. பலவித படங்களுடன் அழகாக அச்சிடப் பெற்றிருக்கிறது. தமிழ் பள்ளிக்கூடங்கள் யாவற்றிலும் இப் புத்தகங்கள் பாடமாக அமைக்கப்படுவது நலமாகும்.

### பிரஸவ காலத்தில் செய்யவேண்டிய முதல் உதவி.

[ஆசிரியர்: கனம் டாக்டர் யு. ராமராவ் அவர்கள். பக்கம்: ௬௪. விலை: அணா ௬. கிடைக்குமிடம்: ஸ்ரீ கிருஷ்ணன் பிரதர்ஸ், ௩௨௬, தம்புசெட்டித் தெரு, சென்னை.]

பிரஸவ காலத்தில் இந்தியப் பெண்கள் படும்பாடு சொல்லொணுத் துயருடையதாகும். அறியாமையினல் கர்ப்ப ஸ்திரீகள் பலவித இன்னல்களுக் குட்படுகின்றனர். எண்ணற்ற சிசுக்கள் இந்தியத் தாயின் எழில் முகங் காணுது வயிற்றிலேயே உயிர் விடுகின்றன. பல பிறக்கினும் அங்கவீன மடைகின்றன. எனவே, கர்ப்ப காலத்தில் அனுஷ்டிக்க வேண்டிய முறைகளைப் பெண்கள் அறிந்திருக்க வேண்டியது மிக அவசியமானதாகும். எண்ணற்ற பெண்கள் சுகப்பிரஸவமின்றித் துன்புறுகின்றனர்.பிரஸவத்தை ஒரு கொடிய நோயாகக் கொள்வார் தமிழ் நாட்டில் பல ரிருக்கின்றனர். அவர்களது செய்கையால் அல்லது அறியாமையினல் இயற்கையாக, சுகமாக நடைபெறவேண்டிய பிரஸவம் செயற்கையாக மாறிவிடுகின்றது. எனவே, பிரஸவ காலத்தில் கவனிக்கப்படவேண்டிய பல முக்கியமான விஷயங்களைப்பற்றி ஒரு நூல் எழுதி வெளியிட்டிருக்கும் டாக்டர் கனம் யு ராமராவ் அவர்கள் மிகுதியும் போற்றற்குரியராவர். இச் சிறு நூலில் கர்ப்ப சின்னங்கள், கர்ப்பகாலத்தில் அனுஷ்டிக்க வேண்டிய ஆரோக்கிய விதிகள், கர்ப்ப விபத்துக்கள், பிரஸவத்துக்குப் பின் செய்யவேண்டிய பாமரிப்பு, கஷ்டப் பிரஸவம் முதலிய பல முக்கிய விஷயங்கள் படங்களுடன் விளக்கப்பட்டிருக்கின்றன.

### Bharathi and His Works.

[இயற்றியவர் திரு. வி. விஸ்வநாதன் அவர்கள். பக்கம்: ௭௨; விலை அணா ௪. கிடைக்குமிடம்: பாரதி பிரசாலயம், திருவல்லிக்கேணி, சென்னை.]

காலஞ்சென்ற சுப்பிரமணிய பாரதியாரியற்றிய செந்தமிழ் இன்பத்தேன் பொழியும் பாடல்களைப் பற்றியும், இனிய கதைகள், பிற கட்டுரைகளாதியவற்றைப் பற்றியும் இவ் வாங்கில நூல் சிறப்புரை கூறுகின்றது. பாரதியாரின் வாழ்க்கைச் சுருக்கமும், அன்னாரது கவி யியற்றும் திறமையும், பரந்த நோக்கமும், உயரிய கொள்கைகளும் பற்பல சான்றுகளுடன் விளக்கப்பட்டிருக்கின்றன. ஆசிரியர் கூறுவதுபோன்று தாய்மொழியிற் பற்றின்றி நிற்போர் தாய்மொழியிற் பற்றுக் கொள்ளுமாறு செய்யவும், தமிழறியாதார்க்குப் பாரதியாரின் இலக்கியச் சுவையை ஊட்டவும் இது ஒரு தூண்டுகோலாக நிற்குமென்பதிலையமில்லை.

---

# செந்தமிழ்ச் செல்வம்.

### இயற்கையின் காட்சியின்பம்.

"விந்தை விந்தையாக வெனக்கே—பல
வித விதத் தோற்றங்கள் காட்டுவிப்பாள்
சந்திர னென்றொரு பொம்மை—அதில்
தண்ணமுதம் போல ஒளி பாய்ந்தொழுகும்
மந்தை மந்தையாக மேகம்—பல
வண்ணமுறும் பொம்மையது மழை பொழியும்
முந்த ஒரு சூரியனுண்டு—அதன்
முகத்தொளி கூறுதற்கோர் மொழியிலையே!

வானத்து மீன்களுண்டு—சிறு
மணிகளைப் போல் நிறைந்திருக்கும்
நானத்தைக் கணக்கிடவே—மனம்
நாடிமிக முயல்கினுங் கூடுவதில்லை
கானத்து மலைகளுண்டு—எந்தக்
காலமு மோரிடம்விட்டு நகர்வதில்லை
மோனத்திலே யிருக்கும்—ஒரு
மொழியுரையாது விளையாட வருங்காண்!

நல்லநல்ல நதிகளுண்டு—அவை
நாடெங்கும் ஓடிவிளையாடி வருங்காண்
மெல்லமெல்லப் போயவை தாம்—விழும்
விரிகடற் பொம்மையது மிகப்பெரிதாம்
எல்லையதிற் காணுவதில்லை—அலை
எற்றிநுரை கக்கியொரு பாட்டிசைக்கும்
ஒல்லெனு மப்பாட்டினிலே—அம்மை
ஓமெனும் பெயர்என்றும் ஒலித்திடுங்காண்!

சோலைகள் காவினங்கள்—அங்கு
சூழ்தரும் பலநிற மணிமலர்கள்
சாலவு மினியனவாய்—அங்கு
தருக்களில் தூங்கிடும் கனிவகைகள்
ஞாலமுற்றிலு நிறைந்தே—மிக
நயந்தரு பொம்மைகள் எனக்கெனவே
கோளமுஞ் சுவையுமுற—அவன்
கோடிபல கோடிகள் குவித்துவைத்தான்."

—"கண்ணன் பாட்டு."

குறிப்பு:—உலகங்களை ஈன்றெடுத்த இயற்கையன்னை, தன் மக்களாகிய நமக்கு அளித்துள்ள 'பொம்மை'களாகிய காட்சியின்பங்கள் நம்மோடு விளையாடக்காத்திருக்கின்றன. இவ்வின்பங்களில் கவலையற மூழ்கி வாழ்வதற்குக் குழந்தையுள்ளம் வேண்டும். இப்பாடல்களில் தமிழ்வாணி குழந்தைபோலக் கொஞ்சி விளையாடுகின்றாள்.

—தமிழ்த்தொண்டன்.

---

### வாடகை விமானங்கள்.

வாடகை மோட்டார் கார்களைப் போன்று, லண்டனில் வாடகை ஆகாய விமானங்கள் விடுவதற்கு ஒரு கம்பெனி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. லண்டனிலிருந்து ஐரோப்பாவின் எந்த பாகத்திற்கும், பகலிலும் இரவிலும் மணிக்கு ௧௦௦ மைல் வேகத்தில் செல்லும் விமானங்கள் விடப்படும். பகலில் மைலுக்கு ௧௦ பென்ஸ் வீதமும் இரவில் ௧௨ பென்ஸ் வீதமும் வாடகை வசூலிக்கப்படும். ஒவ்வொரு விமானத்திலும் ௪ அல்லது ௫ பேர் அமரலாம்.

### கண் பார்வையும் கையெழுத்தும்.

கண் பார்வையில் ஏற்பட்டுள்ள குறைகளைக் கையெழுத்தினல் கண்டுபிடிக்கமுடியுமென ப்ரொபஸர் பிரடரிக்வெல் கூறுகிறார். மனிதனுடைய கண் புகைக்கப்பட காமரா போன்றிருக்கிறது. மிக சமீபத்திலிருக்கும் பொருள்களையே சிலருக்குப் பார்க்க முடியும். இவர்களுடைய கையெழுத்து மிகச்சிறிதாயிருக்கும். ஏனெனில் மிகச்சிறிய பொருளையும் அவர்களுடைய கண் பெரிதாக்கிக் காட்டுகின்றது. மிகத்தூரத்திலிருக்கும் பொருள்களையே சிலருக்குத் தெளிவாகக் காணமுடியும். இவர்களது கையெழுத்து மிகப்பெரிதாகவிருக்கும். ஏனெனில் மிகப்பெரிய பொருளையும் அவர்களுடைய கண் குறுக்கிக் காட்டுகின்றது.

## பலதிரட்டு.

### டெலிபோன்.

௧௯௨௮-ம் வருட இறுதியில் கணக்கெடுத்தபோது, உலகிலேயே, ஐக்கிய தேசங்கள் தான் அதிகப்படியான டெலிபோன்களை உபயோகித்து வருகின்றன எனத்தெரிந்தது. இதைப்பற்றிய புள்ளி விவரம் வருமாறு:—

அமெரிக்க ஐக்கிய மாகாணங்கள்—௧௯,௩௪௧,௦௦; ஜர்மனி—௨,௯௦,௬௧௦; கிரேட் பிரிட்டன்—௧,௭௯௧,௧௮௯; கானடா—௧,௩௪௧,௨௧௧; ப்ரான்ஸ்—௯௯,௦௧௯.

### பொம்மைப் பிரயாணி.

ரயில்வேப்பிரயாணம் எவ்வளவு கலபமாகவிருக்கிறதென்பதை ருபிக்க ஒரு டேனிஷ் பத்திரிகை, பெரிய அளவுள்ள பொம்மை யொன்றை பார்லி லோனுவுக்கு ரயிலில் அனுப்பியது. அதனிடம் ஒரு டிக்கட் இருந்தது. மற்ற பிரயாணிகளிருப்பதுபோலவே அதுவும் ஓரிடத்தில் அமர்ந்திருந்தது. வெளித் தோற்றத்திற்கு அது ஒரு இளம்பெண்ணைப்போல் தோற்றியது. அதனிடம் இருந்த சீட்டில் 'எனது பிரயாணத்தோழர்களுக்கு: ரயில்வண்டி மாற்றங்களில் எனக்குதவிபுரியுங்கள். என்னைத் தூக்கி உயர்த்திக் கால்களை மடக்குங்கள், தனியாக என்னால் நிற்கமுடியாது' என வரையப்பட்டிருந்தது. பெர்லின் விளம்பர மகாநாட்டுத் திறப்புவிழாவில் இப்பொம்மையும் ஒரு விருந்தாளியாக விருந்தது.

### குழந்தைகளுக்குப் படக்காட்சிகள்.

சில விஷயங்களில் 'நியூஜிலண்டு' முன்னணியில் நிற்கின்றது. குழந்தைகளுக்கு சினிமாப்படங்களை உபயோகிப்பது இவற்றுள் ஒன்றாகும். நியூஜிலண்டிலுள்ள முக்கிய நகரமொன்றில் குழந்தைகளுக்கெனத் தனியாக நாடகசாலை அமைக்கப்பெற்றிருக்கிறது. சிறந்த பொழுதுபோக்கான முறையில் கல்விக்குதவி செய்ய சினிமா உபயோகப்படுத்தப்படுகின்றது. சில நாடுகள், வாரத்தில் ஒருநாளை 'குழந்தைகள் இரவு' எனச் சில நாடகசாலைகள் ஒதுக்கி வைத்திருக்கின்றன. ஆஸ்திரேலியாவில் வெள்ளிக்கிழமை ஒதுக்கப்பட்டிருக்கிறது; சனிக்கிழமை அங்கு பள்ளிக்கூட ஓய்வு நாளாகும்.

### மெக்ஸிகோவில் மதுவிலக்கு.

மெக்ஸிகோ நாட்டுத் தலைவர் போர்ட்ஸ்கில் தமது நாட்டில் மதுவை யொழித்துவிட முயன்றுவருகிறார். கல்வியின் மூலமே அவர் தமது எண்ணத்தை நிறைவேற்ற மனங்கொண்டுள்ளார். குடிக்குப் பதிலாக மனத்தைக் கவரும் விளையாட்டுகள், வேடிக்கைகள் முதலியவற்றை ஏற்படுத்தினால் மக்கள் மதுவை யொழிக்க வழியேற்படும் என அவர் நம்புகிறார். பல பத்திரிகைகளும் இம்முறைக்கு ஆதரவளிக்கின்றன.

---

பெரிய மனிதர்களுடன் பழகுவதால் பெறும் அறிவைப்போல புத்தகங்களைப் படிப்பதால் அறிவுபெற முடியாதென்று, வயது முதிர முதிர எனக்கு விளங்குகிறது. நமது பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் இடைவிடாது புத்தகங்களைப் படித்துக்கொண்டிருப்பதைவிட மனிதர்களையும், பொருள்களையும் உணர்ந்து கொள்ள கற்றுக்கொண்டால் எவ்வளவு நன்றாயிருக்கும் என நான் பன்முறை நினைப்பதுண்டு.

—புக்கர் வாஷிங்டன்.

# ஆஸ்திகத்தினுள்ளே நாஸ்திகம் பூத்தது.

(நவீனனந்தன் நவில்வது)

அன்பிற் சிறந்த இளைஞர்களே! இந்திய நூல்களான சமய நூல்களையும் பிற நூல்களையும் நமது நாட்டிலும் பிற நாட்டிலுமுள்ள ஆராய்ச்சி யறிஞர்கள் ஆராய்ந்து வருகிருர்கள். அவர்கள் இந்நூல்களினிடையே எத்தகைய இந்தியாவைக்காண்கிருர்கள்? குருமார்களின் சடங்கு வலையில் அகப்பட்ட இந்தியா ஒரு புறம்; குருமார்களின்—சமயத் தாகர்களின்—கொடுமையை அடக்க எழுந்த புத்தர் ஆகிய சீர்திருத்தவாதிகளின் இந்தியா ஒரு புறம்! சமயக்கணக்கரின்—சா திப் புரட்டரின் இந்தியா ஒரு புறம்; சர்வ ஜாதிய சர்வ சமய—சமாச சன்மார்க்க—நன்னிலைகண்ட திருவள்ளுவர் ஆதிய போறிவாளரின் இந்தியா ஒருபுறம்! கன்னி மேயோவின் கற்பனைக் கண்ணையும் மருளச்செய்யும் மூட பக்திப் பெருங்குன்றமாக நிமிரும் இந்தியா ஒரு புறம்! ஸ்கோபன்ஹேர், மாக்ஸ்மூல்லர், ஆனீஸ்டீல் முதலான மேனாட்டு மேதாவியாது பேரறிவினையும் பிரமிக்கச்செய்து பெருகும் ஞானனந்த வெள்ளமான இந்தியா ஒரு புறம்! எத்தனை விதமான இந்தியா, சரிதவானில் அறிவுக்கண் முன் பாய்ந்து வருகிறது!

ஃ ஃ ஃ

ஞானபக்தி ஒரு புறம்! மூடபக்தி ஒரு புறம்! ஆராய்ச்சி யறிவு ஒரு புறம்! காடுற்ற கற்பனை ஒரு புறம்! கடற்புழுகர் கட்டிவைத்த புராணக் கதைகள ஒரு புறம்! மெய்ப்பொருள் காணும் நோக்கத்தோடு அமைத்து வைத்த பாலங்கள், இன்பபடகுகள் ஒரு புறம்! பகுத்தறிவை அறவே மறந்து நம்பிக்கை—மதத்தையே நம்பி வாழ்ந்த மக்கள் ஒரு புறம்! பெருந்துணிவோடு சுத்த அறிவே சிவமெனக்கூறி, உள்ளொளி காட்டும் பெருநெறி பிடித்தொழுகிய பெரு மக்கள் ஒரு புறம்! இந்தியா, ஆராய்ச்சி அறிஞர் கண்களில், ஓர் அற்புதக் காட்சி நிலயமாக விளங்குகிறது.

ஃ ஃ ஃ

மேக மண்டலத்திற்கு அப்பால் எங்கேயோ உள்ள ஓர் பரமண்டலத்தில் நம்மைப்போன்ற மன உணர்ச்சிகளோடு பரம புருஷனுகிய பகவான் ஒருவன் உண்டு என்னும் ஒரு கொள்கை பல மதங்களுக்கும் பொதுவான கொள்கையாகக் காணப்படுகிறது. இக்கொள்கை கிறிஸ்தவர்களுக்குண்டு, மகமதியர்களுக்குண்டு, சைவ வைணவர்களான இந்துக்களுக்குண்டு. சைன பௌத்தர்களும் மக்களுள்ளங்களை மகிழ்விப்பதற்கு இத்தகைய பரம புருஷனை எப்பெருமான் வேண்டுமென்று அவரது வாயிலாகக்கண்ட பின், அருகனையும் புத்தனையும் தெய்வங்களாக்கி வழிபாடு செய்யத்தொடங்கிவிட்டார். ஆனல் இந்துக்களுடைய வேதாந்த மதத்தில்— சாராமசமான சைவ வைணவ சமயங்களின் உயர்ந்த படிகளில்—இத்தகைய 'தெய்வ புருஷ'னுக்கு வேலையில்லை யென்பதை அறிஞர் அறிவர். கடவுள் எங்கே உளன?—என்ற கேள்விக்குத் தெளிவாகவும் விடையளித்தது இந்து சமயம் ஒன்றே! இறையுயிர் ஒன்றே உயிர்க்குலமெல்லாம் தழுவி நிற்கின்றது—என்னும் கொள்கை ஆஸ்திகமா, நாஸ்திகமா? ஆஸ்திக நாஸ்திக விவகாரங்களைக் கடந்து செல்வதா? என்பது சிந்தை செய்யத்தக்கது. இத்தகைய கொள்கையினலன்றோ,கம்பன் தனது யுத்தகாண்ட முகப்பில், பின் வருமாறு பாடுகிருன்:

'ஒன்றே யென்னின் ஒன்றே யாம்
பலவென் றுரைக்கில் பலவேயாம்
அன்றே யென்னின் அன்றே யாம்
ஆம் என்றுரைக்கின் ஆமேயாம்,
இன்றே யென்னின் இன்றே யாம்,
உளதென் றுரைக்கின் உளதேயாம்
நன்றே நம்பி குடி வாழ்க்கை
நமக்கிங்கு என்னே பிழைப்பம்மா?'

இத்தகைய பெருங்கொள்கையில் ஆஸ்திக நாஸ்திக விவகாரங்களுக்கு வகையுண்டோ? சிந்தியுங்கள், அன்பர்களே!

ஃ ஃ ஃ

பண்டைக் காலத்தில், பரமபுருஷனுகிய பகவான் இல்லையென்று வாதித்தவர்களும் இந்து சமயத்தினராகக் கருதப்பட்டனர். ஆதி இந்து மதம் கடவுள்; மதமன்று—வேதமதமாகயிருந்தது. கடவுளை மறுக்கலாம்; ஆனல் வேதத்தை மாத்திரம் மறுக்கலாகாது, ஒப்புக்கொண்டே தீரவேண்டும் என்று வைதிகர் வற்புறுத்தினர். வேதத்தை ஒப்புக்கொள்ளுவோரே வைதீகராவர் என்பது கவனிக்கத் தக்கது. கடவுள்—நம்பிக்கை பழைய இந்துமதத்திற்கு இன்றியமையாததன்று; வேத—நம்பிக்கையே இன்றியமையாதது. அந்நாளில் கடவுளை நம்பாதவர் நாஸ்திகரல்லர்; வேதத்தை நம்பாதவரே—அதாவது வேதத்தின் தெய்வத் தன்மையை, தெய்வத் தோற்றத்தை ஒப்புக்கொள்ளாதவரே—நாஸ்திகராகக் கருதப்பட்டார். வேதம் பொய்யா மொழி; வேதம் எழுதாக் கிளவி—என்று நம்புவோரே ஆஸ்திகராவர்.

ஃ ஃ ஃ

பண்டைப் பழங்காலத்திலேயே வேதத்தை நம்பாத 'நாஸ்திகர்'கள் இருந்தனர். பிரகஸ்பதி அல்லது வியாழ முனிவன் ஒரு காலத்தில் வேத வழக்கோடு முற்றும் முரண்பட்ட உலோகாயத மதத்தை நிலை நிறுத்தினன் என்பர். வேத வழக்கை அடியோடு மறுத்த 'சார்வாக' மதத்தினர் சிலர் அந்நாளில் செய்த வாதங்களின் போக்கு வடமொழியாராய்ச்சியால் நமக்கு ஒருவாறு விளங்குகின்றது. அவர்களது விவகாரங்களில் விசேஷ நெஞ்சுத் துணிவோடு நகைச்சுவையும் கலந்திருந்தது. உதாரணமாக, அவர்கள் கேட்கிருர்கள்:— "வேள்விகளில் கொல்லப்படும் மிருகம் மோட்சத்தை அடைகிறதென்ருல், வேள்வி செய்வோன் தன் தந்தையை அவ்வாறு மோட்சத்திற்கு அனுப்பலாமல்லவா?' சடங்கு மதம்—அதிலும் முக்கியமாக இறந்தவர்க்காகச் செய்யப்படும் உத்தரக்கிரியைகள்—புரோகித மக்களின் பிழைப்பிற்காகவே வகுக்கப்பட்டன வென்பது சார்வாகர் கொள்கை. 'வீணர்களும் விதூஷகர்களும் பேயர்களும் சேர்ந்து வேதங்களை உண்டாக்கினர்கள்' என்ற கொள்கையும் பழைய சார்வாகர்களிடையே நிலவி வந்தது. 'வைதிக பண்டிதர்கள் என்று தம்மைத்தாமேகூறிக்கொள்வோர்வஞ்சகரென்றும், அவர்களது கொள்கைகள் ஒன்றோடொன்று முரண்பட்டு, ஒன்றையொன்று அழிப்பனவென்றும், வேதங்களின் ஞானகாண்டமே கர்ம காண்டத்தை மறுக்கிறதென்றும் சார்வாகர் பகிரங்கமாக முழக்கி வந்தார். இவர்களை வைதிகர், நாஸ்திக சிகாமணிகளென்று கூறி, அந்நாளில் ஒதுக்கிவைத்தனர் என்று சொல்லவும் வேண்டுமோ?

ஃ ஃ ஃ

வேத நிந்தனை பெருத மக்களிடையே முன்னுளில் இத்தகைய கொள்கைகளைப் பரப்ப முயன்ற சார்வாக நாஸ்திகர்களது மனே தைரியத்தைப் பழைய வைதீகர்களும் மெச்சித்தான் இருக்கவேண்டும் சார்வாகர்களை நாஸ்திக அமிதவாதிகளென்றும், அதி தீவிர நாஸ்திகர்களென்றும் கூறலாமென்ருல் வேத வழக்கோடு மாறுபடாத வைதிகர் கூட்டத்தில் காணப்பட்ட 'நாஸ்திகர்களை' மிதவாதிகளென்றும், முக்கால் நாஸ்திகர், அரை நாஸ்திகர், கால் நாஸ்திகர், அரைக்கால் நாஸ்திகர் என்றும் கூறுதல்வேண்டும். ஏனெனில்,வேதத்தைப் பிரமாண நூலாக ஒப்புக்கொண்ட வைதிக முனிவர் கூட்டத்திலும் கருத்து வேற்றுமைகள் தோன்றின. 'வேதம் பிரமாணந்தான்! ஆனல், அதற்குஎத்தகைய கௌரவம் கொடுக்கலாம்?' என்பது குறித்து வாதங்களும் எதிர்வாதங்களும் எழுந்தன. செய்யா மொழி யென்றும், பொய்யா மொழி யென்றும் வேதத்தைப் போற்றும் ஜைமினி முனிவரது 'பூர்வமீமாம்ச'த்தில் கடவுளுக்கு இடமே இல்லை; வேத வேள்விகளுக்கு மட்டுமே இடமிருக்கிறது. வேதத்திலும் கர்மகாண்டம் ஒன்றே முக்கியமானதென்றும், ஞானகாண்டம் பயனற்றதென்றும் 'பூர்வ மீமாம்சம்' சொல்லுகிறது. 'பூர்வமீமாம்சம்'வேதத்தின் ஆறு அங்கங்களில் ஒன்ருகக் கருதப்படுகிறது. இதற்கு நேரான 'எதிரி' கபில முனிவரது சாங்கியமாகும். பகுத்தறிவிற்கு விரோதமான கொள்கையை நம்புவது தகாதென்றும், அத்தகைய கொள்கைக்கு வேதத்திலே ஆதாரம் கிடைத்தாலும அது தள்ளத்தக்கதே யென்றும் கபிலர் தமது 'சாங்கியத்'தில் வற்புறுத்துகிருர். வைதிக கோஷ்டியில் சேர்ந்தவர் என்ற பெயரைக் காப்பாற்றிக்கொள்ளவே கபிலர் சொல்லளவில் வேதத்திற்கு மரியாதை செலுத்துகிருரே யொழிய வேறில்லை யென்று பழைய கால உரையாசிரியர்களிற் சிலர் கருதுகின்றனர்.

ஃ ஃ ஃ

வேதத்தின் ஆறு அங்கங்களில் பூர்வ மீமாம்சமும், சாங்கியமும் இவ்வாறு ஒன்றோடொன்று மாறுபடுகின்றன. எனினும் இரண்டிலும் பரம புருஷனுன பகவானுக்கு இடமில்லை. வேதத்திலும் பகுத்தறிவே சிறந்ததென்று கொண்டாடும் சாங்கியம், குன்றினிலே ஏற்றிவைத்த விளக்கைப் போலப் பழைய உலகத்திற்கு 'அறிவு விளக்கம்' காட்டத் தோன்றியதாகும். வேதத்தின் அங்கங்களில் 'நியாயம்' என்று ஒன்றுண்டு. இந்த 'நியாய'த்திலும் சார்வாக நாஸ்திகரது கொள்கையை அநுசரித்து வேதங்கள் நம்பத்தக்கன அல்ல என்பதற்குரிய ஆட்சேபனை யொன்று எழுப்பப் பெறுகின்றது. வேதங்களில் மூன்று வகையான குறைகளிருக்கின்றன என்பதே குறித்த ஆட்சேபனையாகும், முதற் குறை வேதங்கள் பொய்யா. மொழியல்ல; வேதங்களில் பொய்ம்மையுண்டு என்பது. இரண்டாவது குறை வேதங்கள் முன்னுக்குப்பின்முரண்படுமென்பது; வீண் சொல்லடுக்குகள் வேதங்களில் காணப்படுகின்றன என்பதுமூன்ருவதுகுறை. இவ்வாறுகூறும் 'நியாய' சாஸ்திரமும் பழைய இந்தியாவின் ஆராய்ச்சி யறிவு வளர்ச்சி நெறியிலே ஓர் 'மைல் கல்'லாக அமைவதாகும்.

ஃ ஃ ஃ

'பூர்வ மீமாம்ச'மென்னும் வேதாங்கத்தில் வல்லவராயிருந்த மாதவாச்சாரியார் வேதத்தின் தெய்வத் தன்மையை ஆட்சேபிக்கும் இரண்டு காரணங்களைக் குறிப்பிடுகிருர். வேத மந்திரங்களைக் கண்ட முனிவர்களின் பெயர்கள் அம் மந்திரங்களிலேயே வெளியிடப்பெறுகின்றன. இதனுல் வேதங்களை இயற்றியவர் மனித முனிவரே யாவர் என்பது தெளிவாகும், இரண்டாவது காரணம், வேதங்களில் இயற்கைக்குமாறுன—மூடத்தனமான—விஷயங்களும் காணப்படுகின்றன என்பது. இவ்விரண்டு காரணங்களும் மாதவாசாரியர் காலத்தில் ஆராய்ச்சி யறிஞரால் எடுத்துக் காட்டப்பட்டனவென்று ஊகித்தல் கூடும். மாதவாசாரியர் இக்காரணங்களை ஒப்புக்கொள்ளவில்லை; மறுக்கிருர். எனினும் ஆராய்ச்சி யறிவும் துணிவும் பழைய இந்தியாவில் காணப்பட்டன என்பதற்கு மாதவாச்சாரியாரும் சான்று தருகிருர் என்பது வெளிப்படையன்ருே?

ஃ ஃ ஃ

அறிவின் ஆதாரங்கள் அல்லது பிரமாணங்கள் எவை? இக்கேள்விக்கு வேதாங்கம் அல்லது வேதத்தின் கிளைகளான தத்துவ நூல் ஒவ்வொன்றும் விடைதர முயல்கின்றது. இப்பிரமாணங்களில் ஒன்று ஆப்த வாக்கியம் என்பது. ஆப்த வாக்கியம் என்ருல் என்ன? 'பூர்வ மீமாம்சம்' செய்த ஜைமினி முனிவர் வேதம் மட்டுமே ஆப்த வாக்கியம் என்று சொல்லுகிருர். வேதமோ வேதம் அல்லாதோ தரும் நம்பத்தக்க சான்றனைத்தும் ஆப்த வாக்கியமாகு மென்பது 'பூர்வ மீமாம்சம்' ஒழிந்த மற்ற வேதாங்க நூல்களின் கருத்து. 'நியாயம்' என்னும் தத்துவசாஸ்திரம் வேதாங்கமான ஆறு நூல்களில் ஒன்றென்று சொன்னோமல்லவா? இந்நூலின் உரையாசிரியர் ஆப்தர் யார்? என்று விவரிக்கும்போது ரிஷிகளும், ஆரியரும் மட்டும் ஆப்தரல்லரென்றும், மிலேச்சரும் அங்கிருக்கூட அறிவுள்ளவராயின் ஆப்தரேயென்றும், அவரது வாக்கியமும் பிரமாணமாகக் கொள்ளத்தக்க ஆப்தவாக்கியமேயென்றும் வற்புறுத்தியுள்ளார். இக் கருத்தினையே தமிழர் பொது மறையாகிய திருக்குறளும்,

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்று தெள்ளத் தெளிந்த மொழியில் வெளியிடுகின்றது. இப் பெருங் கருத்தினை வெளியிடும் பெரியோர் ஆராய்ச்சியுலகின் 'வழிகாட்டி'களாக என்றும் விளங்குவ ரென்பது திண்ணம்.

(தொடரும்)

## இராமநாதபுரம் ஜில்லா

### ஆசிரியர் மகாநாடு.

இராமநாதபுரம் ஜில்லா ஆசிரியர்களின் முதல் மகாநாடு காரைக்குடி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஹைஸ்கூலில், ஸெப்டம்பர் உஅ-ம் தேதி சனிக்கிழமை நடைபெறும். இராமநாதபுரம் ஜில்லாக் கல்விபதிகாரி திரு. டி. பி. கிருஷ்ணஸ்வாமி முதலியார் யம். ஏ. பி. யல். அவர்கள் மகாநாட்டைத் திறந்து வைப்பார்கள். 'பூமி சாஸ்திரம் கற்பிக்கும் முறை' என்பது பற்றி பள்ளத்தூர் திரு. யஸ். யன். சங்கா ஐயர் யம். எ. யல். டி. அவர்களும், பள்ளிக் கூடங்களில் அகராதிகளின் உபயோகம்' என்பது பற்றி சாத்தூர் திரு. ஆர். மகாதேவய்யர் பி. எ. யல். டி. அவர்களும், 'ஆசிரியர்கள் சங்கம் ஆரம்பப் பாடசாலை ஆசிரியர்களுக்கு என்ன செய்யக்கூடும்' என்பதுபற்றி திருப்பத்தூர் திரு. பி. எ. சுப்பிரமணிய அய்யாவர்களும் பேசுவார்கள். யஸ். யஸ். யல். ஸி. போர்டு அமைப்பு, ஜில்லா ஸெகண்டரிக் கல்வி போர்டு, பாடப் புத்தகக்கமிட்டி, பாடங்களைத் தாய் மொழியிற் கற்பித்தல், பள்ளிக்கூட புத்தகசாலைகளின்உபயோகம்முதலிய பலவிஷயங்களைப்பற்றித் தீர்மானங்கள் நிறைவேற்றப்படும் எனக் காரியதரிசிகள் அறிவிக்கின்றனர்.

---

### மீரத் சதி வழக்கு.
### யதீன்தாஸ் மரணத்திற்காக ஒத்திவைக்கப்பட்டது,

ஸெப்டம்பர் கச-ம் தேதி மீரட் சதி வழக்கு விசாரணைக் கெடுத்துக் கொள்ளப்பட்டது. யதீன்தாஸ் மரணத்திற்காகக் கோர்ட்டு நடவடிக்கைகளை ஒத்தி வைக்க வேண்டுமென்று எதிரிகள் கோர்வதாக அறிவிக்கப்பட்டது. பிராஸிகூஷன் தாப்பார் இதை எதிர்த்தனர். மாஜிஸ்டிரேட் இதைப் பற்றிக் கூறும்போது திரு. யதீன்தாஸ் தாம் நம்பிய லட்சியத்திற்காகத் தம் உயிரை விட்டாரென்றும், அவரது உண்ணு விரதத்தைப் பற்றி அபிப்பிராய பேதங்களிருந்தாலும் அவரது கருத்தைப்பற்றி யாருக்கும் சந்தேகமில்லையென்றும், ஒத்திவைக்க முடியாமலிருப்பது பற்றித் தாம் வருந்துவதாகவும் தெரிவித்தார். ஆனால் எதிரிகள் தாங்கள் வக்காலத்தை ரத்து செய்து விட்டதாக அறிவித்ததால் வேறு வழி யில்லாததால் கோர்ட்டு நடவடிக்கையை ஒத்திவைக்க வேண்டியதுதானென்று முடிவு செய்யப்பட்டு ஒத்திவைக்கப்பட்டது.

---





இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கத்தின் கO, ககவது அறிக்கைகள் நமக்கு அனுப்பப்பட்டிருக்கின்றன. அவற்றினின்றும் சில முக்கியமான பகுதிகளை ஈண்டு குறிக்கிறோம்: —

## இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம்.

### வங்கிகள் அறிக்கை.

இரங்கூனிலுள்ள சகல வங்கிகளும் கையெழுத்திட்டு ககஉக, மார்ச்சு மீ முதல் தேதியிலிருந்து அதுவரை கடைக்கு வந்து பணம் வசூலித்துச் சென்ற பில்கட்கெல்லாம் வங்கியில் கொண்டுவந்து பணம் கட்டவேண்டுமென ஓர் அறிக்கை வெளியிட்டிருந்தன. நமது சங்கம் இப்புதுமுறையை ஆட்சேபித்து அதனால் வியாபாரிகட் கேற்படும் கஷ்ட நஷ்டங்களை விளக்கி இரங்கூன் வங்கி சங்கத் தலைவருக்குக் கடிதம் அனுப்பி சங்கக் காரியதரிசி ஷை தலைவருடன் கலந்து பேசினர். லோன்கள், தந்திமூலம் பணமனுப்புதல், டிமாண்டுகள் இவைகட்கு வழக்கம்போல் வங்கிகட்குச் சென்று செட்டியார்கள் பணம் கட்டுவதென்றும், ஊர் உண்டியல்கள், மெமோ சீட்டுகள் முதலியவற்றிற்குச் செட்டியார் கடைக்கு வந்து வங்கிக்காரர்கள் வசூல் செய்வதென்றும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

### கப்பல் அசௌகரியம்.

மார்ச் மாதக் கடைசி வாரத்தில் சென்னைக்குச் சென்ற எதியோபியாக் கப்பலில் இரண்டாவது வகுப்புச் செட்டியார் பிரயாணிகட்குப் படுக்கை மேல்விரிப்புகள், ஸோப்பு முதலியவைகள் கொடுக்கப்படவில்லையென்று எண்மர் குறை கூறியதன்மேல் பி. ஐ. எஸ். என். கப்பல் கம்பெனிக்கு சங்கத்தார் கடிதம் அனுப்பினர். கப்பல் கம்பெனியார் இனி அவ்விதம் குறைகள் நேராதவாறு பார்த்துக்கொள்வதாகத் தெரிவித்திருக்கின்றனர்.

### நீர்க் கஷ்ட நிவாரணம்.

பவ்லே தீவில் சில வருடங்களாக நீர்ப் பெருக்கு ஏற்பட்டதால் விளைவு குறைந்து நஷ்டமுண்டாயிற்று. இதைப்பற்றி அப்பக்கத்திலுள்ள செட்டியார்கள் சங்கத்திற்குத் தெரிவித்ததன்மேல் இன்சின் டெப்டி கமிஷனர், பக்கோ கமிஷனர் முதலிய உத்யோகஸ்தர்களுக்கு விஷயம் பூரா விவரங்களுடனும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

### சர்வ கலாசாலை நிதி.

சர்வ கலாசாலை நிதிக்கு செட்டியார்கள் உதவியிருக்கும் நிதியை உபயோகிக்கும் முறை சர்வ கலாசாலை நிதி டிரஸ்டிகளின் கூட்டம் அடியிற் கண்ட தீர்மானங்களிற் குறிக்கப்பட்டிருக்கிறது:—நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் சம்மதப்பட்டால் (க) அவர்கள் நிதியிலிருந்து வரும் வரும்படியை லேவாதேவி வியாபாரம்பற்றி பிரசங்கம் செய்யும் ஆசிரியரின் சம்பளத்திற்கு உபயோகப்படுத்துகிறது. (உ) அந்நிதியிலிருந்து வரும் வரும்படியிலிருந்து சர்வ கலாசாலை நிதியின் டிரஸ்டிகள் இவ்விஷயத்திற்குச் செலவிடுமாறு சர்வ கலாசாலைக்கு கிராண்டு கொடுக்கிறது. இத்தீர்மானங்களை நமது சங்கத்திற் கனுப்பி நமது அபிப்பிராயத்தைக் கேட்டார்கள். ஓர் நிபந்தனையின்மேல் இத் தீர்மானங்களை ஏற்றுக் கொண்டோம். வங்கித் தொழில்முறை, வியாபாரம் முதலியவை கற்றுக்கொடுக்க ஏற்படுத்தப்படும் 'லெக்சர்ஷிப்பை' சௌகரியம் ஏற்படும்பொழுது நிரந்தரமான ஸ்தாபனமாக மாற்றிவிடவேண்டும். அந்த லெக்சர்ஷிப்புக்கும், ஸ்தாபனத்திற்கும் நாட்டுக் கோட்டைச் செட்டியார்களின் பெயரிடப்படவேண்டும்.

### மோல்மேன்சூனுக்கு இரவில் கப்பல்.

மே மாதம் நாலாந்தேதி ஐராவதி புலோட்டில்லா கம்பெனிக்கு சங்கத்திலிருந்து எழுதிய கடிதத்தில், போக்கலே மார்க்கமாய் மோல்மேன்சூனுக்கும் இரங்கூனுக்கும் ஓடும் கப்பல்களின் நேரம் பிரயாணிகட்கு அசௌகரியமாயிருக்கிறதென்றும், காலையில் புறப்படுவதற்குப் பதிலாய் மாலையில் புறப்பட்டு மறுநாள் காலையில் போய்ச்சேர்ந்தால் பிரயாணிகட்கு சௌகரியமாயிருக்குமென்றும், இதர லயன்களில் இதே பழக்கம் இருந்து வருவதுபோல இதற்கும் செய்யவேண்டுமென்றும் எழுதப்பெற்றது. அதற்கு மேற்படி கம்பெனியார் மேமாதம் ஏழாந்தேதி அனுப்பியுள்ள பதிலில், தம்முடைய யோசனையைப்பற்றி மிகவும் ஆலோசித்ததாகவும், பிரயாணிகளின் பெரும்பாலோரின் சௌகரியத்தைக்கருதி தற்சமயம் ஒருவித மாறுதலும் செய்வது கூடாதெனத் தீர்மானித்துவிட்டதாகவும் அறிவித்துள்ளார்கள்.

### வங்கி பாஸ்புக்.

இரங்கூன் நேஷனல் ஸிடி பேங் ஆப் நியூயார்க்கில் பாஸ்புக் முறையை எடுத்துவிட நமது சங்கத்திலிருந்து அவைகளிருப்பதின் அவசியத்தையும், பெரும்பாலும் சிறுவர்களே வங்கிகட்குப்போய் வருவதால் பாஸ்புக்குகளிருந்தால்தான் அப்போதைக்கப்போது கணக்குகள் சரிபார்த்துக் கொள்ள முடியுமென்றும், ஆதலால் எல்லோர் நன்மையை உத்தேசித்தும் பாஸ்புக்குகள் இருந்துவரட்டுமென்றும் எழுதப்பெற்றன. அவர்களும் ஒத்துக்கொண்டு முன்னிருந்த பழக்கமே நிலவிவரும்படி செய்துள்ளார்கள்.

### பெரிய ரிஜிஸ்தர் கவர்கள்.

உதவி சூப்பிரண்டெண்டண்ட் ஆப் ஸ்டாம்ஸ் எழுதியுள்ள கடிதமொன்றில், க அங்குல நீளமும் கவ அங்குல அகலமுமுள்ள ரிஜிஸ்தர் கவர்களைத்தவிர கசஇ அங்குல நீளமும் கஇ அங்குல அகலமுமுள்ள ரிஜிஸ்தர் கவர்கள் போஸ்ட் ஆபீசில் அகப்படுமென்றும், அவைகளின் விலை O-ச-ஈ என்றும் தெரிவிக்கிறார். வேண்டுபவர்கள் இரங்கூன் போஸ்ட் ஆபீசில் பெற்றுக்கொள்ளலாம்.

### பக்கோ வெள்ளி ரதம்.

பக்கோ தெண்டாயுதபாணிகோவிலுக்கு கிழச்சிவல்பட்டியில் செய்யப் பெற்ற வெள்ளி ரதத்தை பக்கோ நகரத்தாரவர்கள் விருப்பப்படி சென்னையிலிருந்து இரங்கூன் வரையிலும் கப்பல் சேதமில்லாமல் ஏற்றிவந்து தரும்படி B. I. S. N. கம்பெனிக்கு கடிதம் எழுதப்பெற்றது. அவர்களும் ஒத்துக்கொண்டு அவ்விதமே ஏற்றி வந்து தந்தனர்.

### வருமானவரி எச்சரிக்கை.

செட்டியார்கட்கெல்லாம் இவ்வருடம் கக நெ. பாரம் அனுப்பும்பொழுது அத்துடன் 'எச்சரிக்கை நோட்டீஸ்' ஒன்றும் வருமானவரி ஆபீசிலிருந்து அனுப்பப் பெற்றிருந்தது. அதில் சஉ-வது குறிப்புகளில் சொல்லியிருக்கிறபடி பாரத்தைப் பூர்த்திசெய்து அனுப்பாவிட்டால் உக, சஉ-வது செக்ஷன் பிரகாரம் வரி விதிக்கப்படுமென்றும், ஆதாய விபரங்கள் பூராவையும் காணவில்லை யென்றாவது சேர்க்கக்கூடாத செலவுகளைத்தள்ளவில்லையென்றாவது வருமான வரி ஆபீசர்களால் கணக்கு பரிசோதிக்கும் பொழுது கண்டுபிடிக்கப்பட்டால் சரியில்லாத கணக்கைக் கொடுத்ததாகக் கருதப்பட்டு, உஅ-வது செக்ஷன் பிரகாரம் அபராதம்விதிப்பதற்கு இடமுண்டாகுமென்றும், மூன்று வருட சம்பந்தமான பழைய கணக்கு, புதுக் கணக்குப் முதலியவைகளைப் பதிந்து தயாராய் வைத்துக்கொள்ளவேண்டுமென்றும், வரவு இருக்கும் தொகைகள் பெயர், விலாசம் முதலிய முழு விபரத்தையும் தங்கட்குத் தெரியாவிட்டாலும் முதலாளிகளிடம் தெரிந்து வைத்துக்கொள்ளவேண்டுமென்றும், ஸ்திரீதனம், தர்மப்பணம் இவைகட்குக் கொடுக்கும் வட்டியை செலவாக ஒத்துக்கொள்ளும்படி கேட்கும் பக்ஷத்தில், அவைகளை ருசுப்பிக்கூடிய தஸ்தவேஜுகளையும், சாக்ஷியங்களையும் காலதாமதமின்றி சேகரித்து ரூபிக்க ஏற்படும் வாய்தாவில் தவறாமல் ஆஜர்ப்படுத்தவேண்டும் என்றும் கண்டிருக்கிறது.

இவ்வெச்சரிக்கையைக் கண்டதும் நம்மவர் பலர்க்கு மிகுந்த மனக்கசப்புண்டானதால் வருமானவரிக் கமிஷனர்க்கு கீழ்க்கண்ட கடிதம் மேமீ உOஉ அனுப்பப்பெற்றது.

"தன் மதிப்புள்ள எந்த ஜாதியும் எச்சரிக்கை விளம்பரத்தில் எழுதியுள்ள வாசகத்தைக்கண்டு குற்றமாகக் கொள்ளாமலிருக்க முடியாது. இந்நோட்டீஸ்செட்டியார்கட்கு மாத்திரம் கொடுப்பதற்கெனத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. கணக்குக் கொடுப்பதில் செட்டியார்கள் கண்யமில்லாமலிருப்பதால் இவ்வித விசேஷ எச்சரிக்கை கொடுப்பது அவசியமாய்விட்டது என்று மெதுவாக சொல்வதுபோல அவ்வெச்சரிக்கை முழுவதும் காணப்படுகிறது. செட்டியார்களின் நிலைமையையும், இம்மாகாணத்தின் பொக்கிஷதார்கள் என்ற செல்வாக்கையும் கவனிக்கும் பொழுது, இவ்வெச்சரிக்கை நோட்டீஸ் அவர்கள் மனத்தில் துன்பத்தையும், எதிர்ப்பையும் இயற்கையாகவே உண்டாக்கிவிட்டது.

புதிய சுற்றுக்கடிதங்களாலாவது, விதிகளாலாவது வருமானவரிச்சட்டத்தை மாற்ற முடியாது. அவ்விதமாயின், சட்டத்தை வியாக்யானம் செய்து அதனால் ஏற்படும் கஷ்டங்களை விவரிப்பதில் இந்நோட்டீஸ் உபயோகமற்றதே. கணக்குத் தயாரிப்பதில் உதவிசெய்ய வேண்டும் என்ற எண்ணங்கொண்டு இந்நோட்டீஸ் வெளியிட்டிருந்தால், செட்டியார்களை கண்யமற்றவர்களெனக் கொண்டு அவர்களைப் பயமுறுத்தி எழுதியிருக்கவேண்டியதில்லை.

தங்கள் சக்திகொண்ட மட்டும் வருமான வரி உத்தியோகஸ்தர்கள் கேட்பவைகளைத் தயாரித்துக்கொடுக்க செட்டியார்கள் எப்பொழுதும் முயற்சி செய்து வந்திருக்கிறார்கள். வருமான வரிச்சட்டம் மிகவும் கஷ்டமானது—தவறுகள் நேருதல் கூடும். அவ்வித தவறுதல்கள் கண்யமல்லாத எண்ணங்கள்கொண்டு செய்யப்படாதவரையில், வருமான வரி உத்யோகஸ்தர்கள் தீவிர முறைகளைக் கையாளுவது நியாயமல்ல. பண சம்பந்தமானவரை சட்டங்களெல்லாம் ஜனங்கட்குச் சாதகமாக சாத்தியமானவரை கையாளப்படவேண்டிய எண்ணத்துடனேயே செய்யப்பட்டிருக்கின்றன. அறியாமல் செய்யப்பட்ட தவறுதல்களையும் குறைகளையும் பாராட்டக்கூடாது. தவறுதல்களையும் குறைகளையும் கொண்டு அயோக்கியத்தனமென நினைத்துவிடுவது சட்டக்கொள்கைகட்கு விரோதமானது—அவ்விதமாக செய்யுமெண்ணம் வருமான வரி உத்யோகஸ்தர்கட்கில்லையென எங்கள் கமிட்டியார் நம்புகிறார்கள். ஆகவே இக்கண்டனத்தைக் கருதிப்பார்த்து செட்டியார் சமூகத்தினர் மனத்தை அனாவசியமாய்ப் புண்படுத்தும் நோட்டீசை வாபீஸ் வாங்கிக்கொள்ளக் கோருகிறோம்."

வருமான வரிக்கமிஷனர் அக்கடிதத்திற்கு அனுப்பிய பதிலைக் கீழே தருகிறோம்.

"எச்சரிக்கை நோட்டீசைக் கண்டித்திருப்பதைக்கண்டு ஆச்சரியப்படுகிறேன். செட்டியார்களின் நன்மையை உத்தேசித்தே அந்த நோட்டீஸ் வெளியிடப்பெற்றது. ஒப்புக்கொள்ளக்கூடியவிதமாக கணக்குத் தயார் செய்யத்தவறிய செட்டியார்களும், கணக்குத் தயார் செய்தது சரியாயிருக்கிறதா என்று அதிகமாகக் கவனிக்காத செட்டியார்களும் உக (ச) செக்ஷன் கீழ் வரி விதித்தாலும் உஅ-வது செக்ஷன் கீழ் அபராதம் விதித்தாலும் அதனை எதிர்த்து வருவதை அனுபவத்தில் அறிகிறோம். ஏனெனில் வருமான வரி ஆபீசரிடத்தில் கணக்குப் புஸ்தகங்களைக் காண்பித்துவிடுவதால் தாங்கள் சரியான கணக்கு கொடுக்கத் தவறினதும், அல்லது தாங்கள் தயாரித்த கணக்கில் பூராவருமானம் காண்பிக்கத் தவறியதும் மன்னித்துவிடப்பட்டதாக நினைத்து விடுகிறார்கள். இந்தத் தப்பபிப்ராயத்தை நீக்கும் பொருட்டே பட இந்நோட்டீஸ் விடப்பெற்றது. செட்டியார் ஒருவர் சட்டமறியாமலிருப்பதை அல்லது தவறாய் பயப்படுவதை வருமான வரி இலாகா தங்கள் நலனுக்கு உபயோகப்படுத்திக்கொள்ளவிரும்பவில்லை. எச்சரிக்கை நோட்டீஸ் செட்டியார்களை கண்ணியமற்றவர்களென்று மெதுவாகச் சொல்லவுமில்லை.

என்றாலும் தங்கள் சங்கம் அதனைக் கண்டிப்பதால், இனி எந்த செட்டியாருக்கும் அந்த நோட்டீசைவிடுவதில்லை. ஆதலும் இனி எந்த செட்டியாரும் வருமான வரி ஆபீசர் முன் தனக்கு சட்டம் தெரியாதென்றாவது அல்லது சட்டத்தில் ஒரு பாகம் நிறைவேற்றினால் போதும் என்று நினைத்ததாகவாவது சொல்லமாட்டாரெனக் கொள்கிறேன். சட்டத்தின்படி பூராவும் நிறைவேற்ற வேண்டுமென்று இனி வருமான வரி ஆபீஸர்கள் வற்புறுத்தினால் செட்டியார்கள் அதனால் தங்கட்கு குறைகளிருப்பதாகக்கருதமாட்டார்களென நான் கொள்கிறேன்."

இக்கடிதத்திற்கு பின் வருமாறு பதில் அனுப்பியுள்ளோம்.

"செட்டியார்களைப்பற்றி கண்யமில்லாமல் நோட்டீசில் சொல்லவுமில்லை, நினைக்கவுமில்லை யென்று தாங்கள் உறுதி கூறியதற்கு எங்கள் சங்கத்தார் மிகவும் நன்றி பாராட்டுகிறார்கள்.

வருமான வரி உத்யோகஸ்தர்கள் கேட்பவைகளையெல்லாம் கூடுமானவரைப் பூர்த்தி செய்துவைக்கச் செட்டியார்கள் எப்பொழுதும் முயற்சிசெய்து வந்திருக்கிறார்கள். வருமான வரிச்சட்டம் மிகவும் சிக்கலாயிருப்பதுடன் கணக்குகள் தயாரிப்பது சுலபமாயில்லை. செட்டியார்கள் தங்கள் கணக்குப் புத்தகங்களையெல்லாம் வருமான வரி உத்யோகஸ்தர்கள் பார்வைக்குக் கொடுத்துவிடுவதால், அவர்கள் நாணய எண்ணம் ஒருபொழுதும்கொள்ள முடியாது. வருமான வரி சட்டத்தேவைகளைத் தவறாக உணர்ந்து கணக்குகள் தயாரிப்பதில் தவறுகள் நேர்ந்துவிடலாம். அவ்விதத் தவறுதல்களை எப்பொழுதுமே இரக்கத்துடன் கவனித்து வந்திருக்கிறீர்கள். இனியும் அவ்விதமே செய்வீர்களென்று எங்கள் சங்கம் நம்புகிறது. வருமான வரி உத்தியோகஸ்தர்கள் எப்பொழுதுமே சட்டத்தை வற்புறுத்தி வருகின்றனர். ஆனால் சட்டம் சந்தேகமாயிருக்குமிடங்களில் செட்டியார் தவறுதல்கள் செய்துவிட்டால் இயற்கையாகவே இரா வரிகொடுப்பவர்கட்குக் காண்பிக்கும் சலுகைமுன்னர் இவர்கட்கும் காண்பித்து வந்ததுபோல இப்பொழுதும் காண்பிக்கப்படுமென எதிர்பார்க்கிறோம்."

### T. T. கள்.

டெப்டிகான்ஸி கண்ட்ரோலர் கீழ்க்கண்ட அறிக்கையை நமக்கு அனுப்பியுள்ளார்:—

க. தற்சமயமுள்ள ஏற்பாட்டின்படி டி. டிக்கள் (தந்திமூலம் பணம் அனுப்பல்) சப்ளை பில்கள் அனுப்பவேண்டுமானாலும் அல்லது பெற்றுக்கொள்ள வேண்டுமானாலும் கான்ஸி ஆபீஸ், இரங்கூன் இம்பீரியல் பேங்கு, டெப்டி கண்ட்ரோலர் ஆப் கான்ஸி ஆகிய இடங்கட்குப் போகவேண்டியதிருக்கிறது. இவ்வசௌகரியத்தை நீக்குவதற்காக இது சம்பந்தமான எல்லா வேலைகளும் ஆகஸ்டு மீ பதினைந்தாம் தேதியிலிருந்து இரங்கூன் இம்பீரியல் வங்கியில் செய்வதற்கு ஏற்பாடாயிருக்கிறது. ஆகலால் பணம்பெற்றுக்கொள்ளுபவர்களும் அனுப்புகிறவர்களும் இனி இம்பீரியல் பாங்கிற்குப் போகவேண்டியது.

உ. தொடர்ச்சியாகப் பணம் தேவையுள்ளவர்கள். உத்தேசமாய் ஒரு மாதத்தில் எவ்வளவு தேவைப்படுமென்பதை இப்பொழுது தெரிவிப்பதுபோல டிப்டி கான்ஸி கண்ட்ரோலர்க்கு முன்னரே தெரிவித்துவைக்கவேண்டும்.

ங. இப்புது ஏற்பாடானது இரங்கூன் பட்டணத்திற்கு மாத்திரம்தான். இரங்கூன் எல்லைக்கு வெளியிலுள்ள ஊர்கட்கு பணம் அனுப்பு வரவு செய்வதற்கு இப்பொழுதிருக்கும் வழக்கப் பிரகாரம் நடந்து வரும்.

---

(ஒரு நிருபர்)

சென்ற ஆவணிமீ ௨௪-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் ௩ மணிக்கு சங்கக் கட்டிடத்தில் பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கத்தின் ஆறும் ஆண்டின் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதுகாலை பல அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள். திருவாளர் வீ. தெ. குமரப்ப செட்டியாரவர்கள் தலைமை வகித்து நிகழ்த்திய சொற்பெருக்கு வருமாறு:-

சங்க வேலைகள் வருடா வருடம் விருத்தியடைந்து வருவதை அறிக்கையின் மூலமாகவும், அவ்வப்போது வெளிவந்திருக்கும் பிரசுரங்கள் மூலமாகவும் நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். நம்மவர் நலனுக்குரிய எவ்விஷயத்தையும் சங்கம் மிக சிரத்தையுடன் கவனித்து வருகிறது. அறிக்கையில் கூறியுள்ள விஷயங்களனைத்தையும் இங்கு நான் திரும்பக் கூறுவது மிகையாகும். எனினும், இன்று நம்மவர் கவனிக்கவேண்டிய சில முக்கிய விஷயங்களை ஆராய்வது இன்றியமையாததாகும்.

## வங்கி விசாரணைக் கமிட்டி.

அவைகளில் முக்கியமானவை லேவாதேவித் தொழில் முறையைப்பற்றி விசாரித்து அறிக்கை செய்யும்படி இந்தியா கவர்ன்மெண்டார் நியமித்திருக்கும் வங்கி விசாரணைக் கமிட்டிகள். பர்மா கமிட்டியில் நம்மவர் தொழிலில் வல்லுனரான திருவாளர் அ. மு. மு. முருகப்பச் செட்டியாரவர்கள் நமது பிரதிநிதியாக அங்கம்பெற்றுள்ளார்கள். சுதேச லேவாதேவித் தொழிலை எந்த முறையில் விருத்தி செய்வது என்று ஆலோசிப்பதற்காகவே இக் கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது. இதில் நம்மவர்கள் ஒவ்வொருவரும் விசேஷ சிரத்தை யெடுத்துக் கொண்டு தங்களாலியன்ற யோசனைகளை யெல்லாம் சொல்லுவது மிகவும் இன்றியமையாததாகும். இவ் விசாரணையால் நன்மை யேற்படுவதும் தீமை யேற்படுவதும் நம்பிக்கையிலிருக்கிறது. 'லேவாதேவிக்காரர்கள் கடும் வட்டி வாங்குபவர்கள். அவர்களாலேயே விவசாயிகள் பாழடைந்து விடுகிறார்கள்' என்ற கூற்றுக்கள் பொய்யென்பதை விளக்கிக் காட்டும் பொறுப்பு நம்மவர்களைச் சார்ந்தது என்பதை மறந்துவிடாதீர்கள். எல்லோரும் இதில் ஒத்துழைக்காவிட்டால் நம்முடைய நியாயமான கோரிக்கைகளை வற்புறுத்துவதற்கு வேண்டிய சாதனங்கள் கிடைக்காமற் போய்விடும். ஆதலால் நம்மவர் ஒவ்வொருவரும் இது சம்பந்தமாய் நமது சங்கம் கோரும் உதவியை வேண்டும்போது செய்வீர்களென நம்புகிறேன். சென்ற பத்து வருடங்களாக அநேக கமிஷன்களும் பல விஷயங்களைப்பற்றி ஆலோசித்து அறிக்கைகள் வெளியிட்டுள்ளன. ஆனால், அவைகளின் சிபார்சுகளை அமுலுக்குக் கொண்டுவருவதில் சர்க்கார் அதிக ஊக்கங் காண்பிப்பதில்லை. என்றாலும், இவ் விசாரணையின் பலனாக சுதேசத் தொழிலின் இன்றியமையாமையை ஒருவாறு உணர்ந்து அதனை விர்த்தி செய்யத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பெறும் என நம்புவோம். சுதேச கைத்தொழில்கள், சுதேச வியாபாரம் முதலியவற்றிற்கு ஊன்றுகோலாக இருந்து வருவது சுதேச லேவாதேவியே. சுதேச லேவாதேவிக்கும், சர்க்காருக்கும் இம்பீரியல் பேங்க் மூலம் ஏதோ கொஞ்சம் தொடர்பிருக்கிறதே யொழிய போதுமான அளவிற்கு சுதேச லேவாதேவியை சர்க்கார் கண்காணித்து வரவில்லை. குடிகட்கும் ஏற்படவேண்டிய பணசம்பந்தமான தொடர்பில் சுதேச லேவாதேவி ஓர் பலமான அங்கம் பெறும் என நம்புகிறேன்.

# பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம்.

ஆறும் ஆண்டு நிறைவுவிழா.

## அடகுக்கடையும் செட்டியார் தொழிலும்.

கிராமச் சட்டத்திலுள்ள அடகுக்கடை விதிகளின் திருத்தத்தைப் பற்றி நம் சங்கத்திற்கும் சர்க்காருக்கும் நடந்துள்ள கடிதப் போக்குவரவுகளை அறிக்கையில் விவரமாகக் காணலாம். முனிசிபல் சட்டத்திலும் அடகுக்கடை சம்பந்தமான விதிகள் உண்டு. இரங்கூன் முனிசிபாலிடி கூட்டத்தில் அடகுக்கடை வரும்படி குறைந்து விட்டதெனவும் அடகுக்கடைக்கிராக்க ளல்லாதார் அத்தொழில் செய்வதை எவ்விதம் தடுப்பது எனவும் ஆலோசிக்கப்பெற்றிருக்கிறது. முனிசிபாலிடியார் பல பெரிய வக்கீல்களிடம் ஆலோசித்திருக்கின்றனர். நம் சமூகத்தினருக்கும் அடகுக்கடைக்காரர்களுக்கும் உள்ள வித்தியாசத்தை நன்கு உணர்ந்திருந்தாலும், செட்டியார்களிற் சிலர் அடகுத்தொழிலைச் செய்வதாகக்கொண்டு அதனைத் தடுப்பதற்கு இப்பொழுதுள்ள விதிகளைத் திருத்தவேதென்று யோசித்திருக்கின்றனர். இச்சங்கத்தின் புதுக்கமிட்டியார் சிரத்தை யெடுத்து வேண்டியன செய்து அடகுக்கடை விதிகளால் நம்மவர்கட்கு சிரமம் ஏற்படாமல் பார்க்க வேண்டும். செட்டியார்கள் அடகுக்கடைக்காரர்களல்லர். லேவாதேவிக்காரர்கள் பேங்கர்கள் என்பதை வற்புறுத்தவேண்டும். அண்டிமென்டின் பேரில் பணங்கொடுத்து நகைகளை "கொலேடரல் செக்யூரிடி"யாகப் பெற்றுக்கொள்வதற்கும் தட்டுமுட்டுகளையும் சாமான்களையும் ஈடுபிடிக்கும் அடகுக்கடைத்தொழிலுக்கும் பெரும் வித்தியாசமிருக்கிறது. அடகுக்கடை விதிகட்கும் செட்டியார்கள் தொழிலுக்கும் சம்பந்தமில்லையென்று சர்க்காருக்குத் தெளிவாகச் சொல்லிவிடுவது மிகவும் அவசியமென எண்ணுகிறேன்.

## பல வேலைகள்.

நம் சங்கம் செய்துள்ள இதர வேலைகளைச் சுருக்கக் கூறிவிடுகிறேன். தோங்குவா பௌலே தீவுகளின் வெள்ள நிவாரணத்திற்காக சர்க்காருக்குக் கடிதம் எழுதியுள்ளோம். நமக்கு இன்னும் பதில் கிடைக்காவிட்டாலும் சர்க்காரில் சிரத்தையெடுத்து வேலை ஆரம்பித்து நடத்திவருகிறார்கள்' நடந்தமட்டுக்கும் நம்மவர்களுக்கு நலம் ஏற்பட்டிருப்பதாகவே அறிகிறோம். மகாத்மா காந்தி ராஜப் பிரதிநிதி இவ்விருவரையும் வரவேற்கும் பாக்கியம் இவ்வருடத்தில் நமக்குக் கிடைத்தது. இந்திய வியாபார சங்கங்களின் ஐக்கியத்தில் நாம் அங்கத்தினராயிருப்பதால், தனியாகவும் தனி சங்கத்தாலும் ஆகாத காரியங்களை ஐக்கிய சங்கத்தின் மூலமாக முடிக்கும் ஆற்றலடைந்திருக்கிறோம். நமது சங்கத்திலும் ஐக்கிய சங்கத்திலும் இன்னும் சிரத்தையெடுத்து வேலை செய்தால் உண்மையாகவே பல அற்புதங்கள் விளைவிக்கலாம். நம்மவர் தொழிலுக்கு ஆக்கந் தேடுவதோடு நாட்டின் வாணிப விருத்திக்கு நன்மை பல பயக்கலாம். நம்முடைய உயர்வும் நமது நாட்டின் உயர்வும் நம் மக்கள் கையிலிருக்கிறது. ஆதலால் நம் குடி உயர, குலம் உயர, நாடுயர வேலை செய்ய முன் வருவீர்களாக.

## நமது வாணிபம்.

ரயில் வசதியும் கப்பல் வசதியும் இல்லாத அந்நாளில் கடல் கடந்து நம் பெரியவர்கள் செய்த வாணிப முயற்சியின் பலனை நாம் அனுபவித்து வருகிறோம். படிப்படியாக மிகுந்த சிரமத்தின் பேரில் லேவாதேவித் தொழிலை பல தேசங்களில் வளம் பெறச் செய்திருக்கிறோம். அவை கட்குப்பங்கம் வாராமல் காப்பது நமது கடன். நாமடையும் லாப மோர்புறமிருக்க, தேசத்தில் பல்வேறு தொழில்களும் வெளி நாட்டார் கையில் சிக்குண்டு, நாடு வறுமையுற்றிருக்கும் இந்நாள் நம்மவர் கையிலிருக்கும் இத்தாய்த்தொழிலைப் பேணிவளர்த்து இதரத்தொழில்கட்கும் ஆக்கமளித்தல் வேண்டும். எத்தொழில் வளர்ச்சியும் பணத்தைப் பொறுத்திருக்கிறது. புத்திசாலித்தனமாக லேவாதேவி செய்பவரின் கையில் பணம் அதிகப் பலனடைகிறது. சுருங்கச்சொல்லின் லேவாதேவி முறையைப் பொறுத்தே ஒரு தேசம் செல்வவிருத்தியடைகிறது. பர்மாவின் விவசாய விருத்திக்கும், சுதேச தொழில் பெருக்கத்திற்கும் நமது தொழில்முறை காரணமாக யிருந்துவருவதைப் பல அறிஞர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். என்றாலும் நமது தொழில் முறையிலுள்ள குறைகளைக் கவனித்து சீர்திருத்தல் வேண்டும். முதலாவதாக டிபாசிட் பணங்கள் (சமால் பணங்கள்) அனைத்தையும் நடப்புக் கணக்கில் பெற்றுக்கொள்வது நல்ல தொழில் முறையாகாது. எந்த வங்கியிலாவது நடப்புக் கணக்கில் டெபாசிட் (சமால்) தொகைகள் அனைத்தையும் பெற்றுக் கொள்ளுகிறார்களா? எல்லா தொழிலிலும், லேவாதேவித் தொழில் தான் மிகவும் ஜாக்கிரதையாகவும் கவனத்தோடும் செய்யவேண்டியது. கொஞ்சம் சந்தேகமேற்பட்டால் நாணயம் கெட்டுவிடும். ஆறு மாதம் ஒரு வருடம் தவணை பேசி டெபாசிட்டுகளை (சமால் பணங்களை) வாங்கினால் தவணை தேதிக்கு முன் கூட்டியே வேண்டிய ஏற்பாடு செய்துகொள்ளலாம். பல வங்கிகளில் தவணை முறித்துக் கேட்டால் வட்டி கொடுப்பதில்லை. அப்பழக்கத்தை நாமும் அனுசரித்து வரலாம். இரண்டாவது கவனிக்கவேண்டியது சேமநிதி அல்லது ரிசர்வ்பண்டு. வட்டிக்கு உறக்கமில்லையென்று சொன்னாலும் வியாபாரத்தில் நல்ல காலமுமுண்டு, கெட்ட காலமுமுண்டு. பேங்குகளிலும் இதர மேல் நாட்டு கம்பெனிகளிலும் வருடா வருடம் வரும் லாபத்தில் ஒரு பாகத்தை சேமநிதி என்று தனியே எடுத்து வைத்து விடுகின்றனர். நீண்ட நாள் உள்ள கம்பெனிகளை கவனித்தால் அதில் போட்டிருக்கும் முதலைவிட சேம நிதியில் பணம் மிக அதிகமாகச் சேர்ந்திருக்கும்; கஷ்டம் வருகிற காலத்தில் இச்சேமநிதியிலிருந்து பணம் பெற்று க்ஷேமமுறலாம். வட்டி குறைவைக் கவனியாது நிமிஷத்தில் பெறும்படியான செக்யூரிடியில் சேம நிதியின் ஒருபெரும் பாகத்தைக் கொடுத்து வைத்திருக்கவேண்டும். இதனால் பண நெருக்கடி காலத்தில் ஆபத்து நேராது காத்துக்கொள்ளலாம்.

## வருமான வரி.

வருமான வரி விஷயத்தில் நமது சங்கம் மிகுந்த சிரத்தை யெடுத்துக் கொள்வதை நீங்கள் அறிவீர்கள். இவ்வருடத்தில் இரண்டு மூன்று வழக்குகள் இரங்கோன் ஹைக்கோர்ட்டில் வெற்றிகரமாக முடிந்துள்ளன. ௨௩(௪)வது செக்ஷன் கீழ் மூடத்தனமாக இனியாவது வரி விதிக்கமாட்டார்களென நம்புகிறேன். வருமான வரி ஆட்சி முறையில் இன்னும் தகுந்த தொந்தரவிருப்பதாகப் பெருங் கூக்குரலிருந்து வருகிறது. ஒவ்வொரு வழக்கையும் ஹைகோர்ட்டு வரையில் கொண்டுவருவதென்பது முடியாத காரியம். உங்கட்குள்ள வருமான வரிக்குறைகளை யெல்லாம் சங்கத்திற்குத் தெரிவித்துப் பரிகாரம் தேடிக்கொள்ளுங்கள்.

## கம்பை பள்ளிக்கூடம்.

பெட்டியடி பழக்கமும், நாட்டு மக்களின் பாஷாஞானமும் கொண்டு இதுவரை தொழில் செய்து வருகிறோம். காலதேச வர்த்தமானத்திற்குத் தக்க விதம் நம் தொழிலில் சீர்திருத்தஞ்செய்ய வேண்டுமானால் ஆங்கில ஞானமும், மேல்நாட்டு வங்கி முறைகளின் பழக்கமும் நம்மில் பலருக்கு ஏற்படவேண்டும். இவைகளை விருத்தி செய்யும் நோக்கங்கொண்டு கம்பையில் தக்கவசதிகளுடன் நமது குழந்தைகட்கென ஓர் பள்ளிக்கூடம் திறந்திருக்கிறது. பையன்களனைவரும் பள்ளிக்கூட போஜனசாலையிலே உண்டு உபாத்தியாயர்களுடன் எந்நேரமும் கூடியிருந்து வாழ்கின்றனர். தற்சமயம் சாதாரண ஆங்கில தமிழ்க்கல்வியே போதிக்கப்பெற்று வருகிறது. வித்தியார்த்திகள் இதில் தேர்ச்சிபெற்றவுடன் விசேஷ வியாபாரக்கல்வி போதிப்பதற்கு ஏற்பாடு செய்யப்பெறும். பர்மா நகரத்தாரனைவர்களும் இப்பள்ளிக்கூடத்தின் அபிவிருத்தியில் ஊக்கங் காண்பித்து வருவதற்கு மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

## சமூக சீர்திருத்தம்.

பர்மா முதலிய வெளிநாட்டிற்கு வரும் நம்மவர்கள் மிகுந்த அடக்கத்துடன் நடந்து கொள்ளுகிறார்கள். ஆனால் ஊருக்குச் சென்றதும் இங்கு மூன்று வருடங்களாகக் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பணங்களையெல்லாம் வெகு டம்பமாகச் செலவிடுகின்றனர். மறுபடியும் மூன்று, நான்கு மாதங்களில் இங்கு திரும்பிவரவேண்டிய நிலைமைக்கு வந்துவிடுகின்றது. சமூக சீர்திருத்தம் நம் நாட்டின் பல காரணங்கட்காக வற்புறுத்தப்பெறுகிறது. நான் சொல்லும் காரணம் வியாபார முறையைப்பற்றியது. நாம் பண உலகில் அடைந்திருக்கும் செல்வாக்கை விருத்தி செய்யவேண்டுமானால் அறிஞர் கூறும் அவ்வளவு திருத்தங்களையும் நமது நாட்டில் கையாளவேண்டும். அரசியல் முன்னேற்றத்திற்கு சமூக சீர்திருத்தங்களும் இன்றியமையாத ஓர் சாதனமாகும். பால்யவிவாகத்தைத் தடுப்பதற்கு இந்திய சட்டசபையில் ஸ்ரீமான் சாரதா செய்யும் முயற்சியை நாம் போற்றுகிறோம்.

## இவ்வருட அமளி.

சென்ற மாதத்தில் பண நெருக்கடி ஏற்பட்டதையும், அதனால் வந்த இடுக்கண்களையும் சிந்தித்துப் பாருங்கள். நம் பெரியவர்கள் ஏற்படுத்திக் கொடுத்த முறையினின்றும் நாம் ஏதாவது புது முறையாக விருத்தி செய்திருக்கிறோமா என்பதைக் கவனியுங்கள். பொதுவாக நம்மவர்கள் சென்ற சில வருடங்களாகத் தொழிலை ஒழுங்கு செய்து வருகிறார்கள். அது மிகவும் நல்லதுதான். ஆகஸ்டு மாதத்தில் இரங்கோனில் அமளி ஏற்படும் வரையில் பணம் மிகச் சபதமா

(௧௫-ம் பக்கம்பார்க்க)



# மாணவர் பந்தய விளையாட்டு.

## திரு. டி. பி. கிருஷ்ணஸ்வாமி முதலியார் தலைமை வகிப்பார்.

மெடல்களும் வெள்ளி கப்புகளும் பரிசளிக்கப்பெறும்.

(நமது நிருபர்)

அமராவதிபுதூரில் புரட்டாசி ௧௩, ௧௪-ம் தேதிகளில், தனவைசியநாட்டு தேசீய ஆரம்ப பாடசாலைகளின் பொதுப் பந்தய விளையாட்டு, சிறப்புப் போட்டி, பொருட்காட்சி, மாணவர் பொதுக்கூட்டம், பரிசளிப்பு ஆகியவை நடைபெறும். விளையாட்டும், பொருட்காட்சியும் பாரதி பார்க்கில் நடைபெறும். இராமநாதபுரம் ஜில்லா கல்வி அதிகாரி திரு டி.பி. கிருஷ்ணஸ்வாமி முதலியாரவர்கள் M. A. B. L. தலைமைவகிப்பார்கள். மாணவர் பொதுக் கூட்டத்திற்கு சென்னை 'திராவிடன்' ஆசிரியர் திரு. சனகசங்கர கண்ணப்பர் அவர்கள் தலைமை வகிப்பார்கள். கார்கள் நிறுத்துவதற்காகத் தனியிடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நடைமுறைக்கழக அங்கத்தினர் பலர் அதிக ஊக்கத்துடன் வேலைசெய்து வருகின்றனர்.

## அறிக்கை.

நடைமுறைக்கழக அமைச்சர்கள் அடியில் வருமாறு அறிவிக்கின்றனர்:—

### உ௨ கலாசாலைகள்.

போட்டிகளுக்கு இதுவரை ௨௨ பள்ளிக்கூடங்கள் விண்ணப்பம் அனுப்பியிருக்கின்றன. சுமார் ௪00 மாணவர் போட்டியிற் கலந்து கொள்வார்களெனத் தெரிகிறது.

### நடைமுறைக்கழகம்.

திருவாளர்கள் சித சிதம்பரம்செட்டியார், ௩. சொ. அருணாசலன்செட்டியார், சொ. மெ. கோவிந்தன் செட்டியார், பி. மு. பி. சுப்பிரமணியன்செட்டியார் ஆகிய நாலு அன்பர்களும் புதிதாக நடைமுறைக்கழகத்தில் சேர்ந்து உழைத்துவருகின்றனர்.

### வசதிகள்.

போட்டிகளையும் பொருட்காட்சியையும் காண வரும் அன்பர்களுடைய கார்களை நிறுத்தத் தனி இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. போட்டிகள் சம்பந்தமான தகவல்களை அறிய விரும்புவோர், அதற்கென ஏற்படுத்தப்படும் காரியாலயத்திலிருந்து அறிந்து கொள்ளலாம்.

### நன்கொடையாளர்.

திருவாளர் உ. ராம. உ.மு.சுப. அவர்கள் போட்டி விளையாட்டுக்கு ரூ. ௫0 நன்கொடை யளித்திருக்கின்றார்.

நன்கொடையாளர்களுக்குத் தனி இடம் ஒதுக்கப்பெறும்.

### பொருட்காட்சி.

போட்டி விளையாட்டுடன் வைக்கப்படும் பொருட்காட்சிக்குப் பல ஊர்களிலிருந்தும் ஏராளமான பொருள்கள் வந்திருக்கின்றன. காரைக்குடி வியாபாரிகளும் தங்கள் பொருள்களை அனுப்பலாம்.

### நடைமுறைக் கழகக்கூட்டம்

புரட்டாசிமீ அ-ம் தேதி இரவு நடைமுறைக்கழகத்தின் கூட்டம் காந்தி பெண் பாடசாலையில் கூடிற்று. ௧0 அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள். அடியிற்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:—

(௧) பாரதிபாடல், திருக்குறள், முதலிய தமிழ் இலக்கியம், தேசபக்தர் சரித்திரம், நூல் நூற்றல், கதர், கைத்தொழில், சமத்துவம் ஆகியவற்றில் எதையேனும் மேற்கொள்ளும் ஆரம்ப பாடசாலைகளைப் போட்டியிற் சேர்த்துக்கொள்ளலாம்.

(௨) கனம் செட்டி நாட்டரசர் அளித்த 'ரொட்டேடிங் ஸில்வர் கப்'பை அதிக மார்க்குகள் பெறும் கலாசாலையாரிடம் கொடுப்பது.

(௩) முன் விளையாட்டு விபரத்தில் சிறப்புப் பத்திரமும் தனிப் பரிசும் வழங்குவதாகக் குறிப்பிட்டிருப்பது நிறுத்தப்பட்டது.

## நிகழ்ச்சிமுறை.

### புரட்டாசி-மீ ௧௩-௨

சனிக்கிழமை.

கொடியேற்று விழா:—காலை எ½ மணிக்கு பாரதி பார்க்கில் நடைபெறும்.

பொருட்காட்சித் திறப்புவிழா:—காலை எ½-மணிக்குக் காரைக்குடி திரு. சா. லெ. செ. செட்டியப்ப செட்டியாரவர்களால் திறந்து வைக்கப்பெறும்.

தேர்தல் விளையாட்டு:—காலை அ மணி முதல் ௧௧-மணிவரை பையன்களின் தேர்தல் விளையாட்டும், மாலை ௩-மணி முதல் ௬-மணிவரைப் பெண்களின் தேர்தல் விளையாட்டும் நடைபெறும்.

பொதுக் கூட்டம்:—இரவு எ-மணி முதல் அ-மணிவரை ஆசிரியர் மாணவர்களின் பொதுக்கூட்டம் சென்னை 'திராவிடன்' ஆசிரியர் திரு. ஜே. எஸ். கண்ணப்பர் தலைமையில் காந்தி பெண்பாடசாலைக்கு முன் அமைக்கப் பெற்றுள்ள கொட்டகையில் நடைபெறும்.

### புரட்டாசி-மீ ௧௪-௨

ஞாயிற்றுக் கிழமை.

சிறப்புப் போட்டிகள்:—காலை அ மணி முதல் ௧௧-மணிவரை காந்தி பெண் பாடசாலையில் காரைக்குடி வருமானவரி ஆபீசர் திரு. கே. நாராயணசாமி ஐயர் B. A., அவர்கள் தலைமையில் நடைபெறும்.

தலைவர் வரவேற்பு:—மாலை ௨½ மணிக்கு காந்தி பெண்பாடசாலையிலிருந்து பாரதி பார்க்கிற்கு ஊர்வலமாக அழைத்துச் செல்லுதல்

முடிவு விளையாட்டு:—மாலை ௩ மணிக்கு பாரதி பார்க்கில் இராமநாதபுரம் ஜில்லா கல்வி அதிகாரி திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியார் B. A., B. L., I. E. S., அவர்கள் தலைமையில் நடைபெறும்.

பரிசளிப்பு:—மாலை ௬-மணிக்குப் பரிசுகள் வழங்கப்பெறும். பொதுப் போட்டிகளில் அதிகமான மார்க்குகள் வாங்குகிற கலாசாலைக்கு செட்டிநாட்டரசர் உதவிய 'செட்டிநாட் கப்' என்னும் ரொட்டேட்டிங் ஸில்வர் கப்பும், சிறப்புப் போட்டிகளில் அதிக வெற்றி பெறுகிற கலாசாலைக்கு ராஜா ராமனாதசெட்டியார் உதவிய ரொட்டேட்டிங் ஸில்வர் கப்பும் பரிசளிக்கப்பெறும்.

---

## காவிரியில் விபத்து.

கும்பகோணத்தைச் சேர்ந்த ௧௫ வயது பார்ப்பனப் பையன் சில தினங்களுக்குமுன் தற்செயலாகக் காவிரியில் விழுந்து உயிர் துறந்தானெனத் தெரிகிறது.

## ஆப்கன் குழப்பம்

பாச்சா சாகோ தோல்வி.

சமீபத்தில் கிடைத்த செய்திகளிலிருந்து காந்தர் கேலில் பாச்சா சாகோவின் படைகள் பெருந் தோல்வியடைந்தனவென்று தெரிகிறது. பலர் பாச்சாவைவிட்டு விட்டு நாதர்கானிடம் வந்து சேர்ந்துவிட்டனராம்.

கஜினி பிரதேசத்திலுள்ள கில்ஜாய் வகுப்பார் பாச்சா சாகோவின் மீது விரோதமான உணர்ச்சி கொண்டு வருவதாகவும், இதனால் அங்கு பாச்சா சாகோவின் நிலைமை மோசமாய்விடக் கூடுமென்றும் அறிவிக்கப்படுகிறது

## அமானுல்லா கொடி.

காந்தாரத்தில் அமானுல்லாக்கானின் கொடியை பாச்சாவை எதிர்ப்போர் பறக்கவிட்டிருக்கின்றனர்.

---

## காரைக்குடி முனிசிபல் தேர்தல்.

வேலைகள் மும்முரமாக நடக்கின்றன.

திரு. பழ. நாராயணன் செட்டியார் அடியில் வருமாறு எழுதுகிறார்:-

நமது காரைக்குடி முனிசிபல் கௌன்சிலுக்கு, எலெக்ஷன் நடப்பதற்கான முயற்சிகள் வெகு மும்முரமாக நடக்கின்றன. இறுதியான ஓட்டர் ஜாபிதாக்கள் தயாரிக்கப்பட்டு அச்சாகி வருகின்றன. கௌன்சில் பதவிக்கு நிற்க விரும்புகிறவர்களும் இப்பொழுது முதலே ஓட்டர்களிடம் தங்களுக்காதரவு செய்யும்படி சொல்லிவருகிறார்கள். அன்பர்கள் நகரத்திற்கு நன்மை செய்ய சாவகாசமும் ஊக்கமும் உடைய அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுகிறேன்.

நமது முனிசிபாலிட்டி இந்த மாகாணத்திலேயே மிகவும் செல்வம் படைத்த தொன்று என்பதை நேயர்கள் அறிவார்கள். முனிசிபாலிட்டி அமைந்த முதல் வருடத்தில் ஆரம்ப இருப்பு ரூ. ௩௪௪௩௪-0-0; மொத்தவரவு ௩௨௨௪0௩-0-0; வருடக்கடைசி இருப்பு ௩௯௫௫௬... எனவே முதல் வருடத்திலேயே சுமார் ஒரு லட்சத்திற்கு மேல் வரவு செலவு நடந்திருக்கிறது. வேறு பல முனிசிபாலிடிகளில் பிறரிடமிருந்தும் கவர்ன்மெண்டாரிடமிருந்தும் கடனாகவோ அல்லது நன்கொடையாகவோ பணம் பெற்று நகர அபிவிர்த்தி செய்வது வழக்கமாயிருந்து வருகிறது. நமது முனிசிபாலிட்டிக்கு முதல் வருஷத்திலேயே வந்திருக்கும் வருவாயை நோக்க பணமுடை யென்பது கொஞ்சமுமில்லாமலே நமது நகரத்தை 'இரம்ப சுகாதாரமாகவும் அழகும் வசதியும் நிறைந்ததாகவும் செய்யலாம் என்பது விளங்கும். ஆதலால் வரப்போகும் முனிசிபல் சபை ஜனங்களிடம் செல்வாக்கு நிறைந்த நகரத்திற்கு நல்ல வேலைகளைச் செய்யக்கூடியதாக அமையும்படி அன்பர்கள் யாவரும் இப்பொழுதே பலமாக முயற்சி செய்து வரவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

---

## கெல்லூர் மகாநாடு.

அக்டோபர் ௫, ௬-ம் தேதி சனி, ஞாயிற்றுக்கிழமைகளில், கெல்லூரில் பார்ப்பனரல்லாதார் மகாநாடு நடைபெறும். திரு. S. ராமச்சந்திர செட்டி எம். எல். ஸி. அவர்கள் வரவேற்புக் கமிட்டி தலைவராகவும், திரு. பி. முனிசாமி நாயுடு எம். எல். ஸி. அவர்கள் மகாநாட்டுத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கின்றனர்.

## திருவிதாங்கூரில் சுயமரியாதை மகாநாடு.

திரு. எம். கே. ரெட்டி தலைமை வகிப்பார்.

அக்டோபர் ௧௧, ௧௨-ம் தேதிகளில் அகில திருவிதாங்கூர் சுயமரியாதை மகாநாடு நாகர்கோவிலில் நடைபெறும். செங்கற்பட்டு ஜில்லா போர்டுத் தலைவர் திரு. எம். கே. ரெட்டி தலைமை வகிப்பார். சென்னை முதன் மந்திரி கனம் டாக்டர் சுப்பராயன் மகாநாட்டைத் திறந்து வைப்பார். மந்திரி கனம் எஸ். முத்தையா முதலியார் சுயமரியாதைக் கொடியைப் பறக்கவிடுவார்.

## மாதர் மகாநாடு.

குமார மங்கலம் ஜமீன்தாரிணி, ௧௩-ம் தேதி நடைபெறும் அகில திருவிதாங்கூர் மாதர் மகாநாட்டில் தலைமை வகிப்பாரென அறிவிக்கப்பட்டிருக்கிறது.

---



சானென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோனென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி.
சுக்கில-ஹு புரட்டாசி-மூ கக-உ

## முழு வெற்றி.

சாரதா மசோதா சட்டமாகிவிட்டது. செலெக்ட் கமிட்டியார் செய்த சிபார்சுகள் அப்படியே ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்றனவென்பது குறிப்பிடத் தக்கதாகும். இம் மசோதா சட்டமாக்கப்பட்ட இவ்வாரமானது இந்திய சரித்திரத்தில் குறிப்பிடத்தக்க புனித வாரமாகக் கொள்ளப்படுமென்பதிலையமில்லை. இம் மசோதாவை அடியோடு கவிழ்த்துவிட வேண்டுமென்று தேசத் துரோகிகள்—மக்களைத் தின்று வாழும் வைதீகப் பிடுங்கல்கள் செய்த முயற்சிகள் கொஞ்சமல்ல. என்ன செய்தும் சட்டமாகிவிட்டது. வைதீகர் போட்ட முட்டுக் கட்டைகள் யாவற்றையும் எதிர்த்து ஏறி மசோதா வெற்றியென்னும் நிலையை அடைந்தது. இச் செய்தி அறிவும் தேசபக்தியுமுடைய யாவருக்கும் மகிழ்ச்சியை அளிப்பதாகும். இந்த மசோதா விஷயத்தில் மூக்கில் ஆவியுள்ளவரையும் எதிர்த்துத்தான் பார்த்திருக்கின்றனர். கடைசிவரை அணுவளவும் மாற்றுமல் மசோதா நிறைவேறியிருப்பதிலிருந்து, நாட்டில் சீர்திருத்த உணர்ச்சி எவ்வளவு உரம் பெற்று வருகிறதென்பதும் வைதீகர்களின் உளுத்துப்போன கொள்கைகள் இற்று—மடிந்து விழுகின்றனவென்பதும் தெளிவாகிவிட்டன. மடாதிபதிகள் பிரதிநிதிகளனுப்பினர். பல மாதிரியான வைதீகர்களும், பலமாதிரியான கூட்டங்கள் போட்டனர். கால்தலை தெரியாதவர்களெல்லாரும் தலைவராகித் தூதுகள் சென்றனர். எண்ணற்ற கண்டனக் கூட்டங்கள் நடைபெற்றன. மகஜர்கள் லட்சக்கணக்கான கையொப்பங்களுடன் கற்றை கற்றையாக எழுதியனுப்பப்பட்டன. வைதீகப் பார்ப்பனர் தங்கள் மாய வித்தையெல்லாம் ஒன்றுவிடாமற் செய்தனர். சில பத்திரிகைகளும் ஒப்பாரி வைத்து நின்றன. யார் என்ன செய்தும் மசோதா நிற்கவில்லை. இத்தனை யெதிர்ப்பிருந்தாலும் மசோதா போட்ட குறியிலிருந்து ஒரு அணுவளவு மாற்றமும் பெறாது அப்படியே நிறைவேறி யிருப்பதை யெண்ணும்போது இந்நாட்டு மக்கட்கு நற்காலம் அணித்தே யிருக்கிறதென்னும் எண்ணம் உறுதிப்படுகின்றது.

வைதீகர்கள் மசோதா அங்கீகரிக்கப்பட்ட பின்னரும் விடவில்லை. மூன்று வருஷத்திற்குப்பிறகுதான் அமுலுக்கு வரலாமென்று திருத்தங் கொண்டு வந்தனர். இரண்டாண்டுக்குப் பிறகென்றும் ஒரு ஆண்டுக்குப் பிறகென்றும் திருத்தங்கள் கொண்டு வரப்பட்டு எல்லாம் இடுப்பொடிந்து வீழ்ந்தன. கடைசிவரையிலும் வைதீகர்கள் இடத்தை விட்டு நகராமலிருந்தது அவர்களுடைய சண்டித்தனமான பொறுமையைக் காட்டுகிற தன்றோ? இந்த மசோதா கொண்டு வரப்பட்டதிலிருந்து "இது நிறைவேறினல் மதம் போய்விடும்; தருமம் போய்விடும்" என்று சங்கராச்சாரியார் உள்பட வைதீகக் கூட்டம் யாவும் கூறின. இன்று மசோதா நிறைவேறிவிட்டது. மதம் போய்விட்டது! இனி வைதீகர் செய்வதென்ன? எம். கே. ஆசாரியார் போன்ற வெளிவைதீகர்களும் சங்கராசாரியார் போன்ற கடவுள் பிரதிநிதிகளும் எங்கு செல்லப் போகின்றனரென்று கேட்க விரும்புகிறோம். மதம் போனபிறகு இவர்கட்கு இங்கு வேலையென்ன? இவர்கள் தவங் கிடந்து மதத்தை அழைத்து வரப்போகின்றனரா? இங்கேயே இருந்து மற்ற விஷயங்கட்கும் முட்டுக்கட்டை போடப் போகின்றனரா? என்பது கவனிக்கத் தக்கதாகும். மதம் மதம் என்று பொதுஜனங்களின் உயிரைக் கரைத்து பொருளையும் ரத்தத்தையும் உறிஞ்சும் வேலை இனி நடவாது. அந்தக்காலம் மலையேறிவிட்டது. வைசிராய் வரை போய்ப் பார்த்தாகிவிட்டது. பல்லக்குகளும் பழய புராணக் குப்பைகளைக் கிளறும் புராணிகர்களும் நாடுமுற்றும் சுற்றியாய் விட்டது. ஒன்றும் பலனில்லை. ருதுசாந்திக் கொடுமை பட்டொழிந்தது. வாசல்கம் கன்யா சுல்க மென்னும் கட்டுத்தறிகள் அசைகின்றன. கல்யாணத்தில் மணமக்களுக்கு உரிமை உதயமாகின்றது. இவற்றுக்குக் காரணமாக இருந்த சாரதாவிற்கு வாழ்த்துக்கூறுகிறோம். அதனை ஆதரித்து உதவி புரிந்த கனம் கிரிராவுக்கு நமது நன்றி உரியதாகுக. இம்மசோதாவை யெதிர்த்துக் கடைசிவரை முட்டி இடுப்பொடிந்து வீழ்ந்த வைதீக முயற்சியாளராகிய எம். கே. ஆசாரியார், சேஷய்யங்கார், கும்பகோணம் சங்கராச்சாரியார், மாளவியா முதலியோருக்கும் வைதீகத்தின் பரிதாப நிலையின் அளவைப் பொதுஜனங்கட்கு நன்கு விளக்கிக்காட்டியதற்காக நன்றி செலுத்துகிறோம்.

## நெல்லூர் மகாநாடு.

அடுத்த சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் ஜஸ்டிஸ் கட்சி மகாநாடு நெல்லூரில் கூடப்போகிறது. இம் மகாநாடு மிக முக்கியமானதாகுமெனக் கூறவேண்டியதில்லை. இதில் முக்கியமாக கவனிக்கப்படப்போகிற விஷயங்கள் இரண்டு. ஜஸ்டிஸ் கட்சியின் பெருந்தலைவரான பானகல் அரசர் இறந்தபின் தகுந்த தலைவரொருவரைத் தேர்ந்தெடுக்கும் விஷயம் எஞ்சி நிற்கிறது. இது இப்போது நடைபெறப்போகும் நெல்லூர் மகாநாட்டில் முடிவு செய்யப்பெறவேண்டும். இதைப்பற்றி ஜஸ்டிஸ் கட்சிப் பெருமக்களும் ஏனையோரும் யோசித்துக்கொண்டுதா னிருப்பர். பானகலரசரின் பிரிவுக்குப் பின்னர் ஜஸ்டிஸ் கட்சி ஒழிந்தேபோகும் என்று ஆசீர்வாதம் செய்த சிரோமணிகள் உரை வெற்றுரையாகி ஒழிந்ததென்பதை உலகமறியும். தலைவர் பானகலரசர் கட்சியை உறுதிப்படுத்தித் திறம்பட நடத்தினர். கட்சி உரம்பெற்றது. ஆனல், அவரின் பிரிவால் அந்தக் கட்சி இறந்துபோகும் என்று கூறும்படியான நிலை ஜஸ்டிஸ் கட்சிக்கு வரப்போவதில்லை யென்று நாம் உறுதி கூறியிருக்கிறோம். ஜஸ்டிஸ் கட்சியானது இன்று வெளிவேஷக் கட்சியன்று! தென்னாட்டுப் பார்ப்பனர் கூறுகிறபடி உத்யோக வேட்டைக் கட்சியன்று! பித்தலாட்டக் கட்சியுமன்று!! ஆகலால்தான் யாரிருந்தாலும், யார் பிரிந்தாலும் அது வளர்ந்தோங்கி வருகிறது. பானகலரசர் பிரிந்தவுடன் "இனி ஒழிந்தது" என்று பார்ப்பனர் சந்தோஷங் கொண்டனராயினும் நிகழ்ச்சி வேறு விதமாகிவிட்டது. பானகலரசர் பிரியும்போ திருந்ததைவிட இன்று அக்கட்சி மிகுதியும் வளர்ந்து உரம் பெற்றிருக்கிறதென்பதை யெவரும் அறிவர். இதனல் தலைவராக நிற்போர், கட்சி இயக்கத்துக்கு உதவி புரிதல் கூடுமேயன்றி, அவர்களின் தோளின் ஆதாரவில் கட்சி இயக்கமில்லை யென்பது பச்சையாக விளங்குகிறது. இந்த நம்பிக்கை நமக்கிருப்பதால்தான் இவ் வியக்கத்தை யாரும் எந்த விதத்தாலும் அழித்தொழிக்கமுடியா தென்று உறுதியுடன் கூறுகிறோம். படேலைப்போன்ற பெரியார் எத்தனைபேர் வந்து எதைச் சொன்னலும் பார்ப்பன ரல்லாதார் கட்சியாகிய ஜஸ்டிஸ் கட்சியை அசைக்கமுடியாது. குன்றில் முட்டிய குருவியைப்போல்தான் எதிரிகள் ஆவார்களென்பது திண்ணம். மகாத்மா காந்தியடிகளாரும் வருணசிரமதருமம் பேசியதிலிருந்து தமிழ் நாட்டு ஆதாவை இழக்கவேண்டியவராகிவிட்டனரென்பது உலகறிந்த செய்தியாகும். பார்ப்பனரல்லாத கட்சியாரைத் தூற்ற வெளிவருபவரின் சாயம் வெளுப்பதைத்தவிர கட்சிக்கு ஒரு பாதகமுமுண்டாவதில்லை யென்பது அனுபவத்திற்கண்ட உண்மையாகும். எனவே தலைவர் தேர்தல் நமக்கு ஒரு புரட்சியைத் தந்துவிடக்கூடியதென்று தோன்றவில்லை. தலைவர் தேர்தலில் நமக்குள்ள கருத்து ஒன்றேயாகும். இன்றைய நிலையில் தெலுங்கு நாட்டினரொருவரைத் தேர்ந்தெடுப்பதைக் காட்டிலும் தமிழ் நாட்டின் நிலைமை தெரிந்த—தமிழ் நாட்டில் கலந்து வாழுகிற ஒருவரையே தேர்ந்தெடுத்தல் வேண்டும். இதிலும் ஒரு சமாதானத்துடன், இத்தேர்தலின் பலன் வேற்றுமையுணர்ச்சியென்ற அளவில் கொண்டுவந்து விடாமல் தேர்தல் நடைபெறல் வேண்டும். தலைவர் தேர்தலின் விளைவு இயக்கத்திற் சேர்ந்துள்ளவர்க்குள் பிரிவினைக்கு இடமாகிவிடக்கூடாது. தெலுங்க நாட்டவர் தலைவராகக்கூடாதென்பது நமது கருத்தன்று. தெலுங்க நாடு பார்ப்பனரல்லாதாரியக்கத்தில் தலைசிறந்து நிற்கவில்லை. பொது ஜனங்களின் இயக்கமாக நமது இயக்கம் தெலுங்க நாட்டிவில்லை, தமிழகத்தில் நம் இயக்கமொன்றே பொதுஜன இயக்கமாக நின்று நிலவுகின்றது.

அடுத்த விஷயமாக இருப்பது பார்ப்பனரையும் தென்னிந்திய நல உரிமைச் சங்கத்திற் சேர்க்கவேண்டுமென்பது. இதற்கு நேரான பொருள் நம்மைச் சொல்லும்படி கேட்டால், "ஜஸ்டிஸ்கட்சியின்கொள்கையைக்கொன்று செல்வாக்கைப் பார்ப்பனர் கையில் கொடுத்தல்" என்று சிறிதும் தயங்காமல் கூறுவோம். நமது நாட்டில் பாலோக இயக்கம், கோயிலியக்கம், காங்கிரஸ் இயக்கம், ஆசாரத்திருத்த இயக்கம், கதரியக்கம் முதலிய எல்லா இயக்கங்களும் பார்ப்பன அக்ரஹாரமாகிவிட்டதன் காரணமென்னவென உணர்ந்தால் நமது நேயர்கள் கனவிலும் பார்ப்பனரைச் சேர்க்க விரும்ப மாட்டாரென்பது திண்ணம். பாலோக இயக்கத்திலும் சமாசமுண்டு; பேதமில்லை; எல்லாருக்கும் முக்தி சித்திக்கும். கோயிலும் சர்வ ஜனங்கட்கும் பிதாமாதாவான பரம்பொருள் நம்மைக்காப்பாற்றுதற்கே அமைக்கப்பட்டது. காங்கிரஸானது ஏழை மக்களிடம் கருணைகூர்ந்து உரிமை வாங்கத் தோன்றியது. ஆசாரங்களைத் திருத்தும்நல்லெண்ணங்கொண்டே ஆசாரத்திருத்த மகாநாட்டு இயக்கம் தோன்றியது. ஏழை மக்களை உயர்த்தி நலமளிக்கக் கதர்போர்டு காணப்பட்டது. இவையெல்லாம் நல்லெண்ணத்தோடு நல்லுணர்ச்சியுடன்தான் ஆரம்பிக்கப்பட்டனவெனப் பலர் கருத இடமுண்டு. ஆனல் விளைவென்ன? எல்லாம் பார்ப்பன வாழ்வுக்காகவே முடிந்து விட்டன. பார்ப்பனர் அவற்றுள் நுழைந்ததே இதற்குக் காரணமாகும். நமது இயக்கம நாள்தோறும் வளர்ந்து வருவதற்குக் காரணம் பார்ப்பனர் உள்நுழையா திருந்ததேயாகுமென்பதை நமது நேயர்கள் உறுதியுடன் ஞாபகத்தி லிருத்துதல் அவசியமாகும். பார்ப்பனரைச் சேர்ப்பதால் பலனேற்படுமென்று கருதுவது நஞ்சை நல்லமுதாகக் கருதுவதையே ஒக்கும். இன்று வழியைத் திறந்துவிட்டுப் பிறகு பொருள் போய்விட்டதென்று ஒருவரைப் பார்த்து ஒருவர் கவலுறவேண்டி நேரும் நிலையை வரவழைத்துக் கொள்ளக் கூடாதென்று எச்சரிக்க விரும்புகிறோம். இத் தீர்மானம் மகாநாட்டில் கைவிடப்படுமென்று நம்புகிறோம். ஒருவாறு நெல்லூரில் மகாநாடு கூடியதன் பயனக நிறைவேறுமானல் தமிழ் நாட்டு ஜஸ்டிஸ் கட்சி ஒரு கலக்கங் கலங்குமென்பது திண்ணம். அப்பொழுது ஜஸ்டிஸ் கட்சி உரம் பெற்று நிற்க வேண்டுமென்பதைத் தலைவர்கள் சிந்தித்தல்கடனகுமன்றோ? தமிழகமக்கள் தூரம் அதிகமாக இருப்பதை எண்ணி யொதுங்காமல் நெல்லூர் சென்று மக்கள் நலனை நாடிப் பார்ப்பனர்க்கு வாசலைத் திறந்துவிடாதபடி செய்தல் வேண்டும்.

## எண்டிசைக் காட்சி.

### காந்தியடிகள் திருநாள்.

இந்தியத் தலைவருள் தலை சிறந்தவராக விளங்கும் மகாத்மா காந்தியடிகள் பிறந்து அறுபதாண்டுகள் ஆகிவிட்டன. அப்பெரியாரின் அறுபத்தோராவதாண்டு வருகிற திங்களன்று ஆரம்பமாகின்றது. இம்மாதிரியான பெரியார்கள் உலகிலேயே அருமையாகத்தான் தோன்றுகின்றனர். அவர்கள் எத்தனை யாண்டுகள் வாழ்ந்தாலும் அத்தனையும் மக்கட்கு நலம பயக்கும் நாளாகவே செல்லுதல் கூடும். எனவே அறுபதாண்டிருந்து மக்கள் தொண்டாற்றும் மகாத்மா காந்தியடிகள் இன்னும் பல்லாண்டிருந்து நலம் பல ஆற்றவேண்டுமென்று எல்லாரும் விரும்புவதுபோல் நாமும் விரும்பி வாழ்த்தி மகிழ்கிறோம்.



## அமராவதிபுதூரில் காந்தி திருநாள்.

(நமது நிருபர்)

மகாத்மா காந்தியடிகளின் அறுபத்தொன்றாவது பிறந்த நாட் கொண்டாட்டம் வழக்கம்போல் புரட்டாசி-மீ கடு-ம் தேதி திங்கட்கிழமை (30—9—29) அமராவதிபுதூரில் சிறப்பாக நடைபெறும். அன்று ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்னமளிக்கப்பெறும்.

## காந்தி பெண்பாடசாலை ஆண்டுவிழா.

புரட்டாசி-மீ கடு-ம்தேதி திங்கட்கிழமை மாலை ரு-மணிக்கு சென்னை கவுரவ மாஜிஸ்திரேட் திருமிகு. அலர்மேலு மங்கைத் தாயாரம்மா அவர்கள் தலைமையில் அமராவதிபுதூர் பெண் பாடசாலையின் ஆண்டு நிறைவுவிழா நடைபெறும். அன்று மாணவிகளுடையசொற்பெருக்கு, பாட்டு, சிலப்பதிகார நாடகம், பரிசளிப்பு முதலியன நடைபெறும்.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| தட்ப வெப்ப நிலை:— | அச டிகிரி |
| சென்னை உண்டியல் வட்டம் | 0—உ—0 |
| சென்னை நடப்பு வட்டி | 0—க—0 |
| இரங்கூன் நடப்புவட்டி | 0—க—0 |
| பவுன் விலை | கக—அ—க |
| சீமைக் கட்டித் தங்கம் தோலா ஒன்றுக்கு | ரூ. உக-கரு-க |
| ,, பம்பாய்க் கட்டி ,, | உச—க—எ |
| சீமை வெள்ளிக்கட்டி | இச—0—௯ |
| இம்பீரியல் பாங்கு வட்டி | —ஐந்து பெர்ஸண்டு |
| இங்கிலாந்து பாங்கு வட்டி | — ஐந்தரைப் பெர்ஸண்டு. |

மலாய்நாட்டு உண்டியல் விலை விற்பது — நூற்றைம்பத்தொன்பது.
ஷெ வாங்குவது — நூற்றைம்பத்து மூன்று

மழை:—சென்ற சில தினங்களாகச் சிறிது மழை பெய்து வருகின்றது. வானம் மப்பும் மந்தாரமுமாக விருக்கிறது.

உபசார விருந்து:—சென்ற ஞாயிற்றுக்கிழமை மாலை ச-மணிக்கு, காரைக்குடி முனிஸிபல் ஆபீஸ் சிகாட்டரியும், உத்யோகஸ்தர்களும், முனிஸிபல் தலைவர் ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்களுக்கு ஒரு உபசார விருந்து நடத்தினர். வருமானவரி உத்யோகஸ்தர் திரு. வே. நாராயணஸ்வாமி ஐயர் பி. ஏ. அவர்கள் தலைமை வகித்தார்.

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| கப்பல். | | புறப்படும் தேதி. |
|---|---|---|
| எதியோபியா | செப்டம்பர் | உஅ—௨ |
| ரோகிணு | அக்டோபர் | சு—௨ |
| எக்ரா | ,, | கஉ—௨ |
| ரஜூலா | ,, | உ0—௨ |

கப்பல்கள் மலாய்நாட்டிலிருந்து நாகபட்டினம் வந்துசேரும் விபரம் வருமாறு:—

| கப்பல். | | வந்துசேரும் தேதி. |
|---|---|---|
| ரோகிணு | செப்டம்பர் | உசு—௨ |
| எக்ரா | அக்டோபர் | அ—௨ |
| ரஜூலா | ,, | க0—௨ |
| எக்ரா | ,, | உஉ—௨ |

## தந்திச் செய்தி.

செய்கோன், புரட்டாசி கூ-உ

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்றுப்பதினேழரை. |
| சிங்கப்பூர் வட்டம் | முப்பத்திரண்டு. |

பினங்கு, புரட்டாசி க0உ

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்றைம்பத்தைந்து. |
| ஈயம் விலை | நூற்றைந்து. |
| ரப்பர் விலை | நாற்பத்தொரு. |

இரங்கூன், புரட்டாசி, க0உ.

| | |
|---|---|
| தவணை வட்டி | 0—அ—சு |
| புதிய பவுன் | கரு—க—0 |
| பழைய பவுன் | கரு—க0—0 |

பெரியமில் ஸ்பெஷல் அரிசி.
மார்க்கட் நிதானம்.

| | |
|---|---|
| ஸெப்டம்பர் | சடுரு. |
| அக்டோபர் | சடுஎ—சடுஅ. |
| நவம்பர் | சகூஉ—சகூஅ. |
| பிப்ரவரி—ஏப்ரல் | சகஉ—சகஅ. |

சிறியமில் ஸ்பெஷல் அரிசி.

| | |
|---|---|
| ஸெப்டம்பர் | சஅ0. |
| அக்டோபர் | சஅஉ—சஅஅ. |
| நவம்பர் | சகூஉ—சகூஅ. |
| பிப்ரவரி—ஏப்ரல் | சருஉ—சருஅ. |
| படகுநெல் | ககூரு—ககூடு. |
| ரயில்நெல் | கஅஅ—ககூரு. |

## லண்டன் ரப்பர்.

ஸெப்டம்பர் உரு-உ
ரப்பர் புகைபோட்டது, ஸ்டாண்டர்டு

| | |
|---|---|
| வாங்குபவர் விலை | பத்தேகால் பென்ஸ் |
| ஷெ விற்பவர் விலை | பத்தேகால் வீசம் பென்ஸ். |
| பேல்கிரீப், ஸ்பாட், வாங்குபவர் விலை | பத்தேகால் பென்ஸ். |
| ஷெ விற்பவர் விலை | பத்தேகால் வீசம் பென்ஸ். |

மார்க்கட்:—நிதானம்.

தங்கம்: நயம்பார்த்தங்கம், அவுன்ஸ் நாலு பவுன், நாலு ஷிலிங், பதினெஞ்சரைப் பென்ஸ்.

### சாரதாவுக்கு வாழ்த்து.

இன்று (உசு—கூ—உகூ) மாலை சு மணிக்கு காந்தி நகரில் காந்தி பெண் பாடசாலையில் ஹரிபிலாஸ் சாரதாவைப் பாராட்டுவதற்கு ஒரு பொதுக் கூட்டம் நடைபெறும். அன்பர்கள் வரவு எதிர்பார்க்கப் பெறுகிறது.

## சாரதா மசோதா.

### சட்டமாக நிறைவேறியது.

அறுபத் தேழுக்குப் பதினறு.

### வரட்டு வைதீகம் வீழ்ந்துபட்டது.

மதம் இருக்கிறதா? போய்விட்டதா?

மக்களுக்கு விடுதலை.
வியாழனேக்கம் இனி பதினெட்டுக்கு மேல்தான்!
கச வயதுக்குள் விதவையாகும் தலைவிதி மாற்றப்பட்டது.

ஸெப்டம்பர் உரு-ம் தேதி நடைபெற்ற இந்திய சட்டசபையில் திரு. சாரதாவின் இளமை மணத்தடை மசோதா பெரும் வெற்றியுடன் சட்டமாக நிறைவேறியது. சுஎ பேர் சாதகமாகவும், கசு பேர் பாதகமாகவும் வாக்களித்தனர்.

இருபத்தாறு தேர்ந்தெடுக்கப்பட்ட இந்தியர்கள் சாதகமாகவும், கச தேர்ந்தெடுக்கப்பட்ட இந்தியர்கள் பாதகமாகவும் வாக்களித்தனர்.

ஆறு முஸ்லிம்கள் மசோதாவை எதிர்த்து வெளியேறினர்.

### வாக்குகள் விபரம்.

**சாதகமாக வாக்களித்தவர் விபரம்:—**

திருவாளர்கள் ஏ. ரங்கசாமி ஐயங்கார், கர்னல் போர்ட்டர், யம். ஆர் ஜயகர், ஜம்னுதாஸ் மேட்டா, லால்சந்த் நவல்ரே, யஸ். யன். ஹாஜி, லைக்ஸ், ப்ரைஸ், ஸர். பி. தாகூர்தாஸ், மோடி, யன். ஸி. சந்தர், ஸ்டுவர்ட் ஸ்மித், ஸர். டி. ஆர்கி லின்ட்லே, பிலிப், பண்டித மோதிலால்நேரு, முக்த்ஸார் ஸிங், பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு, ரணஞ்சய ஸிங், ஷெர்வானி யூஸுப் இமாம், கிட்வாய், பண்டித தாகூர்தாஸ் பார்காவா, ஹன்ஸ்ராஜ், ஷா நவாஸ், கர்தார்ஸிங், கயாபிரஸாத் சிதேஸ்வர் பிரஸாத், ராமநாராயன் ஸிங், லாடிகுமி, சால்மர்ஸ், முன்ஷி. ரஸ்க்பிஹாரிலால், சாரதா, ஸர் பி.யன். மித்ரா, ஸர் ஜார்ஜ் ரெய்னி, ஸர். ஜேம்ஸ் கிரீரார், ஸர் ஜார்ஜ் ஷுஸ்டர், ஸர் பி. யல். மித்தர், ஸர் டினெஸ்பிரே, பி.ஆர். ராவ், ராஜர்ஸ், டாட்டன்ஹாம், வி. கே. ஏ. ஐயங்கார், யஸ். என். ராய், டின் டட், ஆர். யஸ். பாஜ்பே, ஸர் பிராங்க், நாய்ஸ், இ. யச். யம். பௌலர், யுபேந்திரபாய், கவன்டன், பொார்ஸ், பிரஞ்ச், ஏ. கே முகர்ஜி, கீன், அப்துல் அஸிஸ், யஸ். யன். ஸிங், ஜி. ஏ. கான், காங்கிரேவ், ஸ்டீவன் ஸென். கே ஸி. ராய், ஜெளவாரிஸிங், ஹீராஸிங், ஆர் யஸ். ஸர்மா, ஸர் அப்துல் காயம், வின்டர் பாதம், ரெவொண்டு சாட்டர்ஜி, கர்னல் கிட்னி.

**பாதகமாக வாக்களித்தார் விபரம்:—**

திருவாளர்கள் ஜோகியா நாயுடு, யம். கே. ஆசாரியா, யம். யஸ். சேஷய்யங்கார், கே. வி. ரங்கசாமி அய்யங்கார், யன். ஸி. கெல்கார், பெல்வி, அமர்நாத் டட், நியோகி, லகிரி, சௌத்ரி, பண்டித மாளவியா, பண்டித நீலகண்டதாஸ், ரஜிவாஞ்சன் பிரஸாத், அப்துல் மதின் சௌத்ரி.

நடுநிலைமை வகித்தவர்:—திருவாளர்கள் ஆனே, டாக்டர் மூஞ்சே, துவாரக பிரஸாத் மிஸ்ரா.

### முன்னைய நடவடிக்கைகள்.

எல்லா திருத்தங்களும் தோற்றுப் போயின.

சென்ற சனிக்கிழமை நடைபெற்ற கூட்டத்தில், கஉ வயதுக்கு மேற்பட்ட குழந்தைகள்விஷயத்தில் கஷ்டநிலை ஏற்பட்டால் அவர்களுக்குசட்டத்தினின்றும் விலக்கு ஏற்படுமாறு சட்டத்தைத் திருத்த வேண்டுமென திரு. நீலகண்ட தாஸ் பிரேரித்தார். இதைக் கவர்ன்மெண்டு அங்கத்தினர்களும் வேறுபலரும் எதிர்த்தனர். மகமதியர்களுக்கு விலக்களிக்கவேண்டுமென மௌல்வி ஷாபி தாவூத் பிரேரித்தார். பிராமணர்களுக்கும், ருதுவான பிறகு மணம் நடத்தக்கூடாதென மதத்தடை ஏற்பட்டிருக்கும் பிற சமூகங்களுக்கும் விலக்களிக்க வேண்டுமென திரு. சேஷய்யங்கார் பிரேரித்தார். சகல திருத்தங்களும் தோற்றுப் போயின.

### சட்டமாகும் காலம்.

மசோதா திங்கட்கிழமை யன்று மூன்றுவது முறை படிக்கப்பட்டது. ககூருரு-ம் வருடத்திலும், ககூஉஉ-ம் வருடத்திலும், ககூஉக-ம் வருடத்திலும் மசோதாவைச் சட்டமாக அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென முறையே திருவாளர்கள் யம். யஸ். சேஷய்யங்கார், பெல்வி, கெல்கார் ஆகியோர் பிரேரித்தனர். இவை யாவும் தோற்றுப்போயின.

மாகாண சட்ட சபைகளிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தவர்களில் பெரும் பாலோர் குறிக்கும் காலத்தில் இந்த சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரவேண்டுமென பண்டித அமர்நாதட்ட் கொண்டுவந்த திருத்தம் ஓட்டுக்கணக்கெடுக்கப்படாமலே தோற்றுப்போயிற்று.

மசோதா இந்துக்களைப் பாதிக்கக்கூடா தெனக் கொண்டு வரப்பட்ட திருத்தத்தைத் தலைவர் நிராகரித்துவிட்டார்.

எல்லா திருத்தங்களும் தோற்றுப் போய்விட்டபடியால், தனிக்கமிட்டியார் திருத்தியபடி மசோதாவை சட்டமாக்க வேண்டுமென ராய்சாஹிப் ஹரிபிலாஸ் சாரதா பிரேரித்தார்.

### முஸ்லீம்கள் வெளியேறினர்.

மௌல்வியத் மூர்தாஸா இதை எதிர்த்துவிட்டு, வேறு சிலருடன் சபையைவிட்டு வெளியேறினர்.

பலர் ஆமோதித்தும் சிலர் எதிர்த்தும் பேசினர்.

ஸர் டி. ஆர்கி லின்ட்லே பேசும்போது 'சபையார் இச் சந்தர்ப்பத்தில் இந்த மசோதாவைச் சட்டமாக்கி லட்சக் கணக்கான குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தியமக்கள் இந்த சபையை வாழ்த்துவார்கள்' என்று குறித்தார்.

ராய்சாஹிப் ஹரிபிலாஸ் சாரதா, மசோதாவை ஆதரித்தவர்களுக்கெல்லாம் நன்றி செலுத்தினர். இதன்மேல் மசோதா ஓட்டுக்கு விடப்பட்டது. எதிர்த்தவர், வாக்குகளைக் கணக்கிடவேண்டுமென்றனர். கணக்கிட்டதில் சாதகமாக சுஎ வாக்குகளும், பாதகமாக கசு வாக்குகளும் கிடைத்தன. எனவே, மசோதா முழு வெற்றியுடன் சட்டமாயிற்று.

# ராமநாதபுரம் ஜில்லாபோர்டு.

இராமனுதபுரம் ஜில்லாபோர்டின் கூட்டமொன்று ஸெப்டம்பர் கசு-ம்தேதி நடந்தது.

## கிராமப் பஞ்சாயத்து.

ஒவ்வொரு பஞ்சாயத்தும் ஏற்பட்டவுடனே மேற்படி பஞ்சாயத்து எல்லைக்குள் கசுஉ௦-ம் வருஷத்து லோகல் போர்டு சட்டம் ஙஙு-வது பிரிவின்படி வரி விதிக்க அந்தப் பஞ்சாயத்திற்கு அதிகாரம் கொடுக்கவேண்டு மென்றும் அந்த அதிகாரம் ஏற்கனவே தாலூகா போர்டுக்குக் கொடுக்கப்பட்டிருப்பதால் அதை ரத்துசெய்து கிராமப் பஞ்சாயத்திற்கு மாற்றவேண்டு மென்றும் சாத்தூர் தாலூகா பஞ்சாயத்து யூனியனின் விருப்பம் ஆலோசிக்கப்பட்டதில் இதைத்தீர ஆலோசித்து ரிப்போர்ட்டு செய்ய ஸ்ரீமான்கள் சுப்பையாபிள்ளை, பொன்னுசாமி பிள்ளை, உக்கிரபாண்டியம் பிள்ளை, ராமசந்திரம் பிள்ளை, காசிவிசுநாதன்செட்டியார், கோபால்நாயக்கர், ராவ் சாகிப் ராஜம் நாயுடு, போர்டுதலைவர் உட்பட்ட ஓர்கமிட்டி நியமிக்கப்பட்டது.

## நீர்வசதி விதிகள்.

கிணறுகள் மற்றும் குடிதண்ணீர் வசதிகளான குளங்களில் மீன்பிடித்தல் முதலிய அசுத்தங்கள்செய்யாமலிருக்கச் சிலவிதிகள் ஏற்படுத்தப்பட்டன.

## புத்தகசாலை.

ஒவ்வொரு தாலூகாபோர்டு எல்லைக்குள் குறைந்தது முக்கியமான ஒரு யூனியனில் ஒரு புத்தகசாலை ஏற்படுத்த வேண்டுமென்றும் அதற்கு ௪000 ரூபாய்க்கு அதிகப்படாமல் போர்டார் செலவு செய்ய வேண்டுமென்றும் ஏற்கனவே நிறைவேறிய ஜில்லா போர்டு தீர்மான விஷயமாய் சற்று வாதமேற்பட்டது. இறுதியில் மேற்படி புத்தகசாலை தற்காலிகமாய் போர்டாபீசிலேயே வைக்கப்பட வேண்டுமென்று தீர்மானித்து அது எவ்வாறு ஸ்தாபிக்கப்படவேண்டு மென்பதை ஆலோசிக்க ஸ்ரீமான்கள் டி. வி. சீனிவாசய்யங்கார், டாக்டர் போதன், ராவ்சாகிப் மாணிக்கவாசகம் பிள்ளை முதலியோர்களடங்கிய ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டது.

## சுங்கவரி.

ஸ்ரீ வில்லிபுத்தூர் முனிசிபாலிடியார் இந்த ஜில்லா போர்டாருக்குக் கொடுக்க வேண்டிய சுங்கவரித்தொகைப் பாக்கி ரூபாய் ௪00கசு ஐயும் மூன்றுவாயிதாவில் போர்டார் வாங்கிக்கொள்ளுவதாய் ஒப்புக்கொண்டனர்.

## சுகாதார போர்டு.

ஸ்ரீமான் காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்கள் ஜில்லா போர்டின் பிரதிநிதியாய் ஹெல்த் போர்டுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## பாடசாலைகள்.

சிவகங்கைத் தாலூகாவைச் சேர்ந்த சிங்கம் புணரியிலும், கல்லல் என்றவிடத்திலும் போர்டு ஆண் பாடசாலைகள் கட்டுவதற்கு முறையே சஅகo, ககஙு௦ ரூபாய் சாங்ஷன் செய்யப்பட்டது. போர்டு எல்லைக்குட்பட்ட ரஸ்தாக்களைச் செப்பனிடவும் புதிய ரஸ்தாக்கள் போடுவதற்கும் சுமார் ரூபாய் சறு,௬௦எ-ம் பரமக்குடி அருகில் வைகையாற்றில் கல்பாலம் கட்டுவதற்கு ரூபாய் அகு,000ம் எஸ்டிமேட்டுகள் சாங்கிஷன் செய்யப்பட்டு கூட்டம் கலைந்தது.

(சு-மி)

---

## போலிச் சாமியார்.

ராமநாதபுரத்தைச் சேர்ந்த சுவாமி பாலசுப்பிரமணியன் என்பவர் திருச்சியிலுள்ள தனவந்தர் வீட்டில் நம்பிக்கை மோசஞ் செய்ததற்காக அவனுக்கு ஒன்றரை வருடமும், ஒருவருடமும் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது. இரு தண்டனைகளையும் ஒரே காலத்தில் தொடர்ந்து அனுபவிக்கவேண்டும்.

---

# நீதிமன்ற நிகழ்ச்சி.

## சென்னை ஹைக்கோர்ட்டு.

(ஜஸ்டிஸ் ஜாக்ஸன் முன்பாக)

### நாடகக்கொட்டகையில் சண்டை.

சில மாதங்களுக்கு முன் நெகமத்திலுள்ள நாடகக் கொட்டகையில் ராஜாம்பாள் நாடகம் நடந்தது நாகப் பிள்ளை என்பவர் டிக்கட் வசூலித்தார். இருவர் டிக்கட்டில்லாமல் உள்ளே சென்றனரென்றும், நாகப் பிள்ளை தடுக்கவே இருவரில் ஒருவர் கத்தியை எடுத்து ஓங்கினரென்றும், நாகப் பிள்ளையும் கத்தியை எடுத்து ஓங்கினரென்றும் தெரிகிறது. அதன்மேல் நாகப் பிள்ளை மீது வழக்குத் தொடரப்பட்டது. வழக்கை விசாரித்த மாஜிஸ்திரேட் எதிரிக்கு உ வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார். அப்பீலிலும் தண்டனை ஊர்ஜிதப்படுத்தப்பட்டது. திரு எ சோமசுந்தரம் என்பார் ஹைக்கோர்ட்டில் திரு. நாகப் பிள்ளை சார்பாக மனுச் செய்துகொண்டார். எதிரி தற்காப்புக்காகக் கத்தியை உபயோகித்தா ரென்று கூறப்பட்டது. ஜட்ஜ் அதை ஏற்றுக்கொண்டு தண்டனையை ரத்து செய்துவிட்டார்.

(ஜஸ்டிஸ் கர்ட்ஸன்வென் முன்பாக)

### தேர்தல் வழக்கு.

ககஉஅ, ஸெப்டம்பர், அ-ம் தேதி, தஞ்சை முனிஸிபாலிடியின் இரண்டாவது வழக்குத் தேர்தல் நடைபெற்றது. அப்புப் பிள்ளை, நடராஜ பிள்ளை யென்ற இருவர் போட்டியிட்டனர். அப்புப் பிள்ளைக்கு ககஒட்டுகளும், நடராஜ பிள்ளைக்கு ௪00 ஓட்டுகளும் கிடைத்தன. அ ஓட்டுகள் செல்லுபடியாகாவைவெனத் தள்ளப்பட்டன. இவற்றில் ௬ ஓட்டுகள் தமக்கு ஆதரவாக விருக்கின்றன வென்றும், ஆகவே தாமே தேர்ந்தெடுக்கப் பட்டதாகக் கணக்கிட வேண்டுமென்றும் திரு. அப்புப் பிள்ளை தஞ்சை சப்கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார். ஜட்ஜ் தள்ளுபடியான ஓட்டுகளில் ஒன்று அப்புப் பிள்ளைக்குச் சேருமென்றும், ஆனல் அவருக்குச் சாதகமாக ஏற்கனவே கணக்கிடப்பட்ட ஓட்டுகளில் ஒன்று செல்லுபடியாகாதென்றும், எனவே அவருக்கு எப்படியும் கூ ஓட்டுகளே கிடைத்திருக்கின்றனவென்றும் கூறி மனுவைத் தள்ளிவிட்டார்.

இதன் மேல் ஹைக்கோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ளப்பட்டது. நிராகரிக்கப்பட்ட ஓட்டுகளில் நாலு ஓட்டுகள் அப்புப் பிள்ளைக்குச் சாதகமாகத் தெளிவாயிருப்பதாக கனம் ஜட்ஜ் அபிப்பிராயப்பட்டார். எதிர் மனுதாருக்காக ஆஜரான வக்கீல், அவ்விதம் கனம் ஜட்ஜ் அபிப்பிராயப்பட சட்டம் இடங்கொடுக்காதென்றும், ஓட்டுகள் செல்லும், செல்லாது என்று சப்ஜட்ஜ் கூறியிருப்பதைத்தான் கனம் ஜட்ஜ் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும் வோட்டுகள் செல்லும் செல்லாது என்று முடிவு கூற கனம் ஜட்ஜுக்கு அதிகாரமில்லையென்றும் கூறினர். கனம் ஜட்ஜ் இதை ஒப்புக்கொண்டு, ஓட்டுகளைப்பற்றிக் கீழ்க்கோர்ட்டின் அபிப்பிராயம் சரியில்லையென்று தமக்குத் தோன்றினலும், அத்தீர்ப்பில் தலையிடத்தமக்கு அதிகாரமில்லையென்றும், கீழ்க்கோர்ட்டு சட்டப்படியே தீர்ப்புக் கூறியிருப்பதாகவும் கூறி மனுவைத் தள்ளிவிட்டார்.

(ஜஸ்டிஸ் வாலஸ் ஜஸ்டிஸ் சுந்தரம் செட்டி முன்பாக)

### இஷ்டப்படி உத்யோகஸ்தரை வேலையிலிருந்து நீக்கலாமா?

தென்னிந்திய ரயில்வேக் கம்பெனியில் ஆடிட்டராக வேலைபார்த்து வந்த கயிலாசநாத நாயனர் என்பவர் ககஉக-ம் வருடத்தில், தம் வேலையைச் சரியாகச் செய்யவில்லையென்றும் பொய்யாகத் தினக்குறிப்பு எழுதினரென்றும் குறை கூறப்பட்டு வேலையினின்றும் நீக்கப்பட்டார். தாம் ஒரு பிசகும் செய்யவில்லையென்றும், தம்மை நீக்கியது நியாயமற்றதென்றும் திரு. நாயனர் கம்பெனி மீது வழக்குத் தொடுத்தார். வழக்கை விசாரித்த சப் ஜட்ஜ், எதிரிமீது கூறப்பட்ட புகார் ஆதாரமற்றதென்று முடிவுசெய்து கம்பெனியார் உ00 ரூ நஷ்ட ஈடு கொடுக்க வேண்டுமெனக் கூறினர். இதன்மேல் அப்பீல் செய்துகொள்ளப்பட்டது. கம்பெனி தன் இஷ்டப்படி யாரையும் வேலையினின்றும் நீக்கலாமென்றும், அவ்விதம் தள்ளினல் தள்ளப்பட்டவருக்கு ஒரு மாதச் சம்பளம் தான் கொடுக்கவேண்டுமென்றும் கம்பெனி சார்பாக வாதிக்கப்பட்டது. கனம் ஜட்ஜ்கள் முடிவு கூறும்போது, வேலைக்காரர் தம் கடமையைச் செய்யத்தவறிவிட்டதாக ருசு ஏற்பட்டால்தான் அவரை நீக்கலாமென்றும், வாதிமீது தவறில்லையென்று கீழ்க்கோர்ட்டுக்கருதுவதைத் தாம் ஒப்புக்கொள்வதாகவும், வேலையிலிருந்து நீக்கப்பட்டவருக்கு ஒரு மாதச்சம்பளம் தான் கொடுக்கவேண்டுமென்றும் குறிப்பிட்டிருக்கிறர்.

(ஓப் ஜஸ்டிஸ், ஜஸ்டிஸ் கார்னிஷ் முன்பாக)

### கொலை வழக்கு.

சென்ற பிப்ரவரி கஅ-ம் தேதி காலை மதுரையிலுள்ள குப்புபாய் என்ற பிராமணப் பெண் கொலை செய்யப்பட்டாள். பிரேதம் ஓர் மறைவான இடத்தில் கண்டெடுக்கப்பட்டது. கைகள் வெட்டப்பட்டிருந்தன. நகைகள் களவாடப்பட்டன. பெரியசாமி என்பவனிடம் நகைகள் இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டு அவன் கைது செய்யப்பட்டான். வழக்கை விசாரித்த செஷன்ஸ் ஜட்ஜ் எதிரிக்குத் தூக்கு தண்டனை விதித்தார். இதன்மேல் ஹைக்கோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ளப்பட்டது. எதிரி குற்றவாளி யென்பதைத் தாம் ஒப்புக்கொள்வதாகவும், ஆனல் எதிரி தன் கூடச் சேர்ந்தவர்களை மறைப்பதால் அவர்களை விட்டுவிட்டு அவனுக்குமட்டும் தூக்குத் தண்டனை விதிப்பது நியாயமன்றென்றும் கூறி ஹைக்கோர்ட்டார் அவனுக்கு தீவாந்திர சிட்சை விதித்தனர்.

---

## எழும்பூர் போலீஸ் கோர்ட்டு.

(திரு. கேஹுநாயர் முன்பாக)

### மகளுக்கு விலங்கிட்ட தந்தைக்கு அபராதம்.

சூளை, குப்பப்பேட்டையைச் சேர்ந்த திரு. எஸ். மகாலிங்கம் பிள்ளை யென்பவர் தமது கஉ வயதுள்ள மகள் தன் பேச்சைக் கேட்கவில்லையென்று அவள் காலில் விலங்கு பூட்டிக் கொடுமை செய்ததாக அவர்மீது வழக்குத் தொடரப்பட்டது. வழக்கை விசாரித்த மாஜிஸ்திரேட் தகப்பனுக்கு மகளைத்தண்டிக்க உரிமையிருப்பினும், மனிதத்தன்மையற்றுத் தண்டித்ததற்காக, உடு ரூ. அபராதம் விதித்து, அதில் அப்பெண்ணுக்கு ரூ உ0 கொடுக்கும் படி உத்தரவிடப்பட்டிருக்கிறர்.

---

### திருடிக்கு கூ மாதம்.

சென்னையைச்சேர்ந்த சதாவதம்மாள், தண்டையார் பேட்டையிலுள்ள ஒரு வீட்டில்பித்தளைப்பாத்திரங்களைத் திருடிவிட்டதாக அவள் மீது வழக்குத் தொடரப்பட்டதில், எதிரி பெண்ணயிருந்தபோதிலும், இதற்குமுன் பல தடவை இம்மாதிரி குற்றஞ் செய்திருப்பதால் ஆறு மாதக் கடுங்காவல் தண்டனை விதிப்பதாக ஜார்ஜ்டவுன் போலீஸ் கோர்ட்டில் முடிவு செய்யப்பட்டது.

### திருடனுக்கு உ வருடம்.

ஹைதர் ஹுஸன் என்பவன், சென்னை கோவிந்தப்ப நாயக்கன் தெருவிலுள்ள ஒரு வியாபாரியின் பணப்பையையும் சாவிகளையும் திருடியதாகக் குற்றஞ்சாட்டப்பட்ட வழக்கில், எதிரி பல தடவை சிறைச்சாலை அனுபவம் பெற்றவர் என்பதை உத்தேசித்தல் அவருக்கு இரண்டு வருடக்கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

---

# சென்னைக் கார்ப்பரேஷன்.

ஸெப்டம்பர் கஎ-ம் தேதி மாலை சென்னைக் கார்ப்பரேஷன் கூட்டம் தலைவர் திரு உ. ராமசாமி முதலியார் தலைமையில் நடைபெற்றது:

## யதீன்தாஸுக்கு அனுதாபம்.

யதீன்தாஸின் மரணத்திற்காக இச்சபை துக்கப்படுவதாகவும், நாட்டிற்காகத் தம் உயிரையும் தியாகஞ் செய்ததைப் பாராட்டுவதாகவும் திரு. சத்தியமூர்த்தி சபைத் தலைவர் அனுமதியுடன் பிரேரித்தார். திரு. செத்தே ரெங்கைய நாயுடு ஆமோதித்தார். ஏகமனதாக நிறைவேறியது.

## கவர்னர் அரசப்பிரதிநிதிக்கு வரவேற்பு.

சென்னைக் கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கும் ஸர். பிரடிரிக் ஸ்டான்லியும், ராஜப் பிரதிநிதி லார்டு இர்வினும் முறையே அக்டோபரிலும், டிஸம்பரிலும்) சென்னைக்கு விஜயஞ் செய்யும்பொழுது உபசாரப் பத்திரங்கள் படித்துக் கொடுக்க ரூ. ௫௦௦ அனுமதிக்கவேண்டுமென திவான்பகதூர் ஜி. நாராயணசாமி செட்டியார் பிரேரித்தார். இதை திரு சத்தியமூர்த்தி எதிர்த்தார். முடிவில் தீர்மானம் அதிகப்படியான வாக்குகளால் நிறைவேறியது.

## மைசூர் திவானுக்கு வரவேற்பு.

மைசூர் திவான் ஜனப் மீர்ஸா இஸ்மேல் சென்னைக்கு விஜயஞ் செய்யும்பொழுது ஒரு வரவேற்புப் பத்திரம் படித்துக் கொடுக்க வேண்டு மென்று கான்ஸாஹிப் அப்துல்லா கொண்டுவந்த பிரேரணை நிறைவேறியது.

## பிச்சைக்காரருக்கு விருந்து.

சென்னை கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர் சங்கத்தார், பிச்சைக்காரர் விடுதியிலுள்ள பிச்சைக்காரர்களுக்கு விசேஷதினங்களில் நல்ல உணவு அளிப்பதற்காக ரூ. ரு,000 நன்கொடை யளித்துள்ளார்கள். இத்தொகையிலிருந்து அவர்களுக்கு வெற்றிலை பாக்கு, புகையிலை, சுருட்டு முதலியவை வாங்கிக்கொடுக்கலாமென சுகாதாரக் கமிட்டி சிபார்சு செய்திருந்தது. தர்மம் கொடுத்தவர் உத்தேசப்படி நடத்தவேண்டுமென முடிவு செய்யப்பட்டது.

---

## ரயிலில் திருட்டு.

முருகன் என்ற இளைஞன் கூ-கூ-உக-ம் நாள் இரவில் மதுரையிலுள்ள பாசஞ்சர் வண்டியிலிருந்த பெட்டியைத் திறந்து ரூ. டு பெறுமானமுள்ள சாமான்களைத் திருடிக்கொண்டிருக்கும்பொழுது மதுரைப் போலீஸாரால் கைது செய்யப்பட்டான். மதுரை சப் மாஜிஸ்திரேட் அவனுக்கு உ வருடக் கடுங்காவல் தண்டனை விதித்து, செங்கற்பட்டு சீர்திருத்தசாலைக்கு அனுப்பியிருக்கிறர்.

## கொலை வழக்கு.

சென்ற ஏப்ரல் கஉ-ம்-தேதி இரவு காஞ்சீபுரத்தில் வசிக்கும் பங்காரு அம்மாளுடைய வீட்டில் சின்னக்கொழுந்து முதலியென்பவர் திருடும்போது கையும் களவுமாகப் பிடிக்கப்பட்டு விடப்பட்டார். மறுநாட் காலையில் அவர் மறுபடியும் வந்து ஷை அம்மாளிடம் சண்டைபோடவே, அவர் முறத்தால் அடிக்கப்பட்டாரென்றும், அன்று மாலை அவர் வேறிருவரையும் கூட்டிக்கொண்டுவந்து அந்த அம்மாளைக் குத்திக் கொன்றுவிட்டாரென்றும் அவர் மீது வழக்குத் தொடரப்பட்டது. வழக்கை விசாரித்த செங்கற்பட்டு ஜட்ஜ், எதிரிக்கு தீவாந்திர தண்டனை விதித்திருக்கிறர்.

## கோவிலில் திருட்டு.

திருநெல்வேலியைச் சேர்ந்த சங்குப்பிள்ளை யென்பவன், பாளையங் கோட்டைக்குச் சமீபத்திலிருக்கும் பிள்ளையார் கோவிலில் விநாயகருக்கணிந்திருந்த நகைகளையும் பூணூலையும் திருடியதாக அவன் மீது வழக்குத் தொடரப்பட்டதில், மூன்று வருடக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. ஏற்கனவே இவன் இதற்கு முன் பத்துமுறை தண்டனை யடைந்துள்ளான். மேற்படியான், மற்றொரு கோவிலிலிருந்து பூணூலையும் நகைகளையுங் களவாடியதற்காக இன்னும் ௬ வருடம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

---



# கல்கத்தா வைதீகர் ஓட்டம்.

## தேசபந்து தாஸ் குமாரியின் வீரச்செயல்.

கல்கத்தா செப் கக

சுமார் ௬00 மாதர்கள் தேசபந்து தாஸ் குமாரி கலியாணி தேவி, லத்திக வாசு தலைமையின் கீழ் கொடிகளுடன், டவுன் ஹாலில் சாரதா மசோதாவை எதிர்க்க காசிம்பஜார் மகாராஜா கூட்டிய கூட்டத்திற்குள் நுழைந்து அதைக் கைப்பற்றி அநேகம் மாணவர்கள் மற்றையோரின் ஆதரவைக்கொண்டு சாரதாமசோதாவைப் பலமாக ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்றினர். கூட்டத்திற்குக் கலியாணிதேவியே தலைமைவகித்தார். பண்டிட் சையாம்சுந்தர் சக்கிரவர்த்தி மசோதாவை ஆதரித்துப் பேசுபவர்களே, இதொரு அந்தரங்கக் கூட்டமென்று கூறிபேசவிடாது தடுக்க முயன்றார். ஆனல், அவரால் முடியவில்லை. அவர் அடங்கி ஒடுங்கி உட்கார்ந்தார். பின்னர் அக்கூட்டத்தைப்பார்க்கவந்திருந்தபண்டிட் ஜவஹர்லால் நேருவை இதைப்பற்றி தீர்ப்புக்கூறும்படி கேட்கப்பட்டது. அவர் இது பொதுக் கூட்டமே என்றார், இதில் இருகட்சியாருக்கும்பேச உரிமையுண்டென்றும் கூறினர். வைதீகர்கள் இவ்விதம் அவர் தீர்ப்புக்கூறியதை ஆட்சேபித்தனர். குழப்பமுண்டாயிற்று சிலர் ஹாலிலிருந்து வெளியே தூக்கிக்கொண்டுபோய் விடப்பட்டனர். இவ்விதமாகவை தீகர்கள்தாங்கள் தோல்வியடையவே சாரதா மசோதாவை ஆதரிப்பவர்களைக் கூட்டம் நடத்த விட்டுவிட்டு ஓட்டம் பிடித்தனர்.

---

## தாகூரின் ஆதரவு.

கவி, டாக்டர் தாகூர் சாரதா மசோதாவை ஆதரிப்பதாகவும், ஆண்களுக்கு உ௨-ம், பெண்களுக்கு கஅ-ம் மண வயதாக நிர்ணயிக்கப்படவேண்டு மென்றும் தெரிவித்திருக்கிறர்.

## தமிழுக் காதரவு.

சென்னை சர்வகலாசாலையின் தமிழ் பரீட்சையில் முதன்மையாய்த் தேறும் மாணவருக்கு உதவி செய்ய, திருப்பனந்தாள் மடத்து தம்பிரான் காற்பதினயிரம் உதவியிருக்கின்றரென்று தெரிகிறது. இவ்வருடம் வெகுமதி திரு. எம் சுப்பிரமணிய ஐயர் என்ற மாணவருக் களிக்கப்பட்டிருக்கிறது.

---

(பத்தாம்பக்கத் தொடர்ச்சி)

பிருந்தது. மார்க்கட்டில் சுமார் ஏழுபது லட்சம் ரூபாய் கைவசம இருந்து வந்தது. அதுசமயம் இரங்கோனில் அமளி ஏற்பட்டதால் இரண்டு மூன்று நாட்களில் டெப்பாஸிட்டுச் செய்து கேட்போர்க் கெல்லாம் கொடுத்துச் சமாளித்துக் கொள்ள முடிந்தது. சுமார் ஒரு கோடி ரூபாவரை இரண்டு மூன்று நாளில் கேட்கக் கேட்கக் கொடுக்க முடிந்தது நம்மவர் கடைகளுக்குள்ள ஒற்றுமையின் வெற்றியேயாகும்—என்றாலும் இதிலிருந்து அனேக பாடங்கள் கற்றுக் கொள்ள வேண்டும்; ஒற்றுமையை இன்னும் விருத்திசெய்யவேண்டும்.

## பாங்க் ஆப் செட்டிநாட் லிமிடெட்.

நம்மவர்களிடையே ஓர் பாங்கு ஏற்படுத்த வேண்டுமென்று பல நாட்களாக எண்ண மிருந்துவந்தது. சங்கத்தின் ஆறும் ஆண்டுவிழாவின் நன்னளாகிய இந்நாளில் "பேங்க் ஆப் செட்டிநாட் லிமிடெட்" ஆரம்பஞ் செய்யப்பெற்றிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

பின்னர் ஆறும் ஆண்டு அறிக்கை நிறைவேற்றப்பட்டது. புதிய ஆண்டுக்கு திரு. ராம. அரு. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் தலைவராகவும், திரு. சா. அ. சு. ராமன் செட்டியாரவர்கள் காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். மற்ற உத்தியோகஸ்தர்களும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். வந்தன வாழ்த்திடன் கூட்டம் கலைந்தது.

---

# எண்ணெய்க் கிணறு எரிந்தது.

## ஏராளமான நஷ்டம்.

ரக்பி, செப், கஉ

ஹல் நகரத்திலுள்ள ஆம்லியே—அமெரிக்க எண்ணெய்க் கம்பெனிக்குச் சொந்தமான ஒரு மண் எண்ணெய்க்கேணி தீப்பற்றிக்கொண்டு அதி கோரமாக நேற்று எரிந்துகொண்டிருந்தது. இக்கேணியில் இலட்சம் காலன் மண் எண்ணெய் இருந்தது காலையில் ௬அ0,000 காலன் மண் எண்ணெய் இன்னும் எரியாமல் இருப்பதாகக் கணக்கிடப் படுகின்றது. இரவு நான்கு மணி நேரமாக நெருப்பணைக்கும் படை இதுவரையில் கண்டுபிடிக்கப்பட்ட நெருப்பணைக்கும் தந்திரங்கள் பலவற்றையும் உபயோகப்படுத்திப் பார்த்தாய்விட்டது. நெருப்பு அசையவில்லை இப்பொழுது நெருப்பணைக்கும் படை தீயை அணைக்கும் முயற்சியை விடுத்து, அருகாமையில் உள்ள கேணிகட்குத் தீ பரவாமலிருக்கும்படியாய் பாதுகாப்பு முறைகளை அநுசரித்து வருகின்றது. எவ்வளவு தண்ணீர் விட்டபோதிலும் தண்ணீர் முழுதும் உடனே ஆவியாய் மாறி விடுகின்றது. அக்கம் பக்கத்திலுள்ள நெருப்பணைக்கும் படைகள் எல்லாம் இங்கு குவிந்துநின்று வேலைசெய்கின்றன. ரசாயன முறையில் நெருப்பணைக்கும் படை ஒன்று ௬0 மைல் தூரத்திலுள்ள லீட்ச நகரத்திலிருந்து இந்த (ஹல் நகரத்திற்கு) வந்துள்ளது. வண்டியிலிருந்து நெருப்பணைக்கத்தக்க ரசாயனச் சரக்குகள் ஸ்பெஷல் ரயில்வண்டியில் அனுப்பப்பட்டன.

---

## பரஞ்சோதி ஸ்வாமிகள் குருபூஜை.

சிதம்பரம் ஸ்ரீ பரஞ்சோதிஸ்வாமிகளுடைய முதல்வருட குருபூஜை புரட்டாசித் திங்கள் கஉ-ம்நாள், சிதம்பரம் மன்னர்குடி ரோட்டுத் தெருவிலுள்ள ஸ்ரீ சற்குரு விலாஸ மடத்தில் நடைபெறுமென அறிவிக்கப்படுகிறது.

---

## மோட்டார் திருட்டுக்குத் தண்டனை.

பாளையங்கோட்டை முனிஸிபல் தலைவர் திரு. என். பொன்னுசாமி அவர்களின் மாக்ஸ் வெல் மோட்டாரைத் திருடியதாகக் குற்றஞ் சாட்டப்பட்ட ராமலிங்கம்பிள்ளை முதலிய அறுவருக்கு திருநெல்வேலி முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் ஒரு வருடம் கடுங் காவல் தண்டனை விதித்திருக்கிறர்.

---

## அய்மேன்.

மாதக்கூட்டம்:— சென்ற ஆவணித் திங்கள் கூ-ம் நாள், நமது ஷண்முகானந்த சங்கத்தின் முதலாவதாண்டு ஒன்பதாந்திங்கட் கூட்டம் திரு. ராம. அ. ராம. ராமநாதன் செட்டியாரவர்கள் தலைமையின் கீழ் கூடிற்று. தமிழ் வித்வான் பேரியூர் திரு. ச. சொக்கலிங்கம் பிள்ளை திரு. சோலையப்பன் சுப. ஆறுமுகம் ஏ.எல். சுந்தரராஜன், பெரியணன், காளிமுத்து முதலானவர்கள் முறையே 'விதியும் மதியும், இன்சொல், வேண்டி வினைசெயேல் வீண் செலவு, கடவுள் நம்பிக்கை' கைவிடப்பட்டார். ஆறாவது தினம்' என்பனபற்றி மிக அழாகச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்கள். பின்னர் தலைவரவர்கள் தகுந்த மேற்கோள்களுடன் அன்று முடிவுரை கூறியதும் மங்கள வாழ்த்துடன் இரவு 11-மணிக்குச் சபை இனிது நிறைவெய்தியது எனக் காரியதரிசி அறிவிக்கிறர்.

## தேவகோட்டை.

(ஒரு நிருபர்)

தசாவதானம்:— கோட்டாறு தசாவதானி திரு. பி. ஆறுமுகம் பிள்ளையவர்கள் இவ்வூருக்கு விஜயஞ்செய்துள்ளார்கள். இன்னும் ஒருவார காலத்தில் அவர்கள் இவ்வூரில் பலவிதமாக அவதானஞ்செய்து காட்டுவார்கள் எனத்தெரிகிறது. அவதானத்தின் சிறப்பைப் பற்றியும், திரு. பிள்ளையவர்கள் இத்துறையில் பெற்றிருக்கும் திறமையைப்பற்றியும் எடுத்துக்கூற வேண்டியதில்லை. அன்பர்கள் நேரிற்கண்டு ஆனந்திக்கலாம்.

---

# இங்கிலாந்தில் மதுபானக் கணக்கு.

ககஉஅ-ம் ஆண்டு வெள்ளைக் கணக்குப்படி ககககூ-ம் ஆண்டையும் ஒப்பிட்டுப் பார்க்கில் இங்கிலாந்தின் மதுபானக்கணக்கு விபரம் வருமாறு:—

பீர் உற்பத்தி ௪00-க்கு ௬௫ மடங்கு குறைந்து விட்டது. சாராய வகைகள் ௪௦0-க்கு சஉ-மடங்கு குறைந்து விட்டது. கககூ-ல் இங்கிலாந்திலும் வேல்ஸிலும் ௬௦௨,000 பேர்கள் மீறிய குடிக்காகத் தண்டிக்கப்பட்டனர். ககஉஅ-ல் ௬௫000 பேர்கள் தாம் தண்டிக்கப்பட்டுள்ளனர். கககூ-ல் ௫00 பேர் குடியால் இறந்திருக்கின்றனர், ககஉஅ-ல் உ000 பேர்கள் இறந்திருக்கின்றனர். கககூ-ல் மதுபானம் புகட்டியதால் ௬உ00 குழந்தைகள் மரணமாயிருக்கின்றன; ககஉஅ-ல் ௬00 தான் இறந்திருக்கின்றன.

வேலை நிறுத்தங்களால் கககூ-ல் ஒரு கோடியே ஒரு லட்சத்து ஐம்பத்தையாயிரம் வேலை நாட்கள் இழக்கப்பட்டன. ககஉஅ-ல் பதின்மூன்று லட்சத்து ஐம்பத்து ஐயாயிரம் நாட்கள் இழக்கப்பட்டுள்ளன.

சென்ற ஆண்டில் குடிவெறியால் ௬௫000 ஆண்களும் அ000 பெண்களும் தண்டிக்கப்பட்டனர். போர்க்காலத்தில் காணப்பட்ட தொகையைத் தவிர இதுவே மிகக் குறைந்த தொகையாம்.

---

## பம்பாய் மாதர் மகாநாடு.

சென்ற சனிக்கிழமையன்று ௬-வது பம்பாய் மாதர் கல்வி மகாநாடு மிஸஸ் சுந்தரபாயின் தலைமையில் நடைபெற்றது. பெண்களுக்குக் கல்யாண வயது கசு ஆகவும் ஆண்களுக்கு உக ஆகவும் ஏற்படுத்த வேண்டுமென்றும், சாரதா மசோதாவை வரவேற்பதாகவும் தீர்மானிக்கப்பட்டன.

---



# சென்னை மதுவிலக்குப் பிரசாரக் கமிட்டி.

சென்னை மதுவிலக்குப் பிரசார கமிட்டிக்கு திரு. எ.ராமசாமிமுதலியார் அவர்கள் தலைவராகவும், திவான்பகதூர் டி. வரதராஜுலு நாயுடு அவர்கள் உபதலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்.

---

## மாக்ஸ்வினி குடும்பத்தாரின் அனுதாபம்.

திரு. யதீந்திரநாத் தாஸின் மரணத்தை முன்னிட்டு அயர்லாந்து மேரி மேக்ஸ்வினி குடும்பத்தார் திரு. சென்குப்தாவுக்கு ஒரு அனுதாபத் தந்தி யனுப்பியிருக்கின்றனர்.

---

"வைதிகர் கூச்சல்" என்ற தலைப்புடன் 'தமிழ்நாடு' வரைந்திருக்கும் தலையங்கம் வருமாறு:—

பால்ய விவாகத்தைத் தடுக்க இந்திய சட்டசபையில் ஸ்ரீ சாரதா கொண்டுவந்துள்ள மசோதாவை எப்படியாவது இந்த தடவை யோசனைக்கு எடுத்துக்கொள்ளாமல் தடுக்க வைதிகர்கள் செய்த ஆர்ப்பாட்டங்கள் தோற்றதைக் கேட்டு மிகவும் சந்தோஷப்படுகிறோம். வைதிகர்களின் வயிர முடியான மாளவியா பண்டிதரும், ஷை சட்டத்திற்கு முட்டுக்கட்டை போட முயன்றது வீணாயிற்று. ஸ்ரீ எம். கே. ஆச்சாரியார் அலைச்சலும் ஒருவாறு அடங்கிற்று. சாரதா மசோதாவை இப்போதே யோசிக்கவேண்டியதென முடிவாகியிருப்பதைக்கேட்டு சந்தோஷிக்கிறோம். சாரதா மசோதா விவாதத்திற்கு வந்திருப்பதால் சிறுகச் சிறுக திருத்தப் பிரேரணைகள் புகுத்தி ஷை சட்டத்தின் வலிமையைக் குறைக்க சட்டசபையில் பலமான முயற்சி நடக்குமென்பதில் சந்தேகமில்லை. நாட்டின் பல பாகங்களிலிருந்து கடைசியாக எதிர்ப்புத் தந்திகள் பறக்குமென்று நம்புகிறோம். தமிழர்கள் ஒரு வாரம் வரையில் உஷாராயிருந்து சமயோஜிதம்போல் வைதிகர் கூச்சலை மடக்கிவரவேண்டியது மிகவும் அவசியமாகும். சிறு பெண்களுக்குக் கல்யாணம் செய்வதால் சம்பவிக்கும் கஷ்டங்களைத் தமிழ்நாட்டார் நன்கு அறிந்திருக்கிறார்கள் என்று நம்புகிறோம். ஹிந்து விதவைகளில் க வயதிற்குட்பட்ட சிசுக்கள் சுகஉ-ம், ஒரு வயதிற்குமேல் உ வயதிற்குள் சகஅ பேர்களும், உ வயதிற்கு மேல் ங வயதிற்குள் கஉஅ பேர்களும், ங வயதிற்குமேல் ச வயதிற்குள் உஅஙங பேர்களும், ச வயதிற்கு மேல் ரு வயதிற்குள் எகஅ பேர்களும், ஆக ஐந்து வயதிற்குட்பட்ட விதவைகள் கஉகசு பேர்களிருந்து வந்தார்களென்று ஜன கணிதரிப்போர்ட்டிலிருந்து தெரிகிறது. ரு வயதிற்குமேல் கo வயதிற்குள் அரு,ருo பேர்களும், கo வயதிற்குமேல் கரு வயதிற்குள் உ,ஙங,ருங பேர்களும் விதவைகளாக இருந்தார்கள். கo வயதிற்குள் களகரு பேர்களும், கரு வயதிற்குள் ங,ஙச,எகக பேர்களும் விதவைகளாக இருந்துவந்தனர். தவிரவும், ஜன கணிதப் புள்ளி விவரங்களை அலசிப் பார்க்கையில் விவாகமான ஒவ்வொரு கOOO ஹிந்து ஸ்திரீகளிலும் கச பேர்கள் ரு வயதிற்குட்பட்டவர்களாகவும், கசக பேர் கo வயதிற்குட்பட்டவர்களாகவும், சஙஎ பேர்கள் கரு வயதிற் குட்பட்டவர்களாகவும் இருந்து வந்தார்களென்று தெரிகிறது. இதிலிருந்து ஹிந்து பெண்களில் கOO-க்கு கக பேர்கள் கo வயதுக்குட்பட்ட குழந்தைகளாகத் திண்ணைகளில் விளையாடிக் கொண்டிருக்கையிலேயே குடும்ப வாழ்க்கையை நடத்திவருவதாகக் கருதப்படுகின்றனரென்றும், கOO-க்கு சச பேர்கள் கரு வயதிற்குள், அதாவது பூரண சரீர பக்குவமடையாமலும், கர்ப்பமாவதைத் தாங்கிக்கொள்ள முடியாமலுமிருக்கையில், விவாக வாழ்வை நடத்திவரவேண்டியிருந்ததென்றும் தெரிகிறது. கரு வயதுக்கு மேற்பட்டவர்களில் ஏராளமாக இருந்துவரும் துர்ப்பாக்கியசாலிகளான விதவைகளைப்பற்றி நாம் இங்கு விசாரிக்கவில்லை. ஒன்றுமறியாத சிறு பெண்களுக்குக் கழுத்தில் தாலி கட்டி கஷ்டப்படுத்துவோருக்குக் கடுந்தண்டனை விதிப்பதே சிறந்த தர்மமென்று நினைக்கிறோம். ஈன்றெடுத்த தாயின் மடியில் விழுந்து விளையாடவேண்டிய சின்னஞ் சிறு குழந்தைகள், புருஷனை இழந்து விதவைகளாயிருக்கக் காண்போர் கல்மனம் கரையவேண்டாமோ? ஆனால் நம் நாட்டு வைதிக பிராமணர்களுக்கு இக்கொடிய காட்சியும் கண் திறக்கவில்லை யென்றால், அவர்களை சிறையில் அடைத்து வைக்கவேண்டியது அவசியமல்லவா யென்பதை யோசிக்கும்படி தமிழர்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம். வைதிகர் கூச்சலைத் தொலைத்து, தருமத்தை நிலைநிறுத்த பாலிய தமிழர்கள் முன்னுக்கு வரவேண்டும். பெண்களுக்கு சச வயதுக்கு மேலும், ஆண்களுக்கு கஅ வயதுக்கு மேலும் விவாகம் செய்வது குற்றமென்பதாய், அப்படிச் செய்வதை தண்டனை விதிக்கவேண்டுமென்பதுமே ஸ்ரீ சாரதா அவர்கள் கொண்டுவந்துள்ள சட்டத்தின் கருத்தாகும். இதில் ஹிந்து மதத்துக்கோ அல்லது பிராமணர்களுக்கோ என்ன கெடுதல் இருக்கிறதென்பது நமக்கு விளங்கவில்லை. பிராமண சமூகத்திற்றான் பால்ய விவாகக் கொடுமை அதிகம். பிராமணரல்லாதாரில் பிராமணர்களைப் பின்பற்றும்

# எதிரொலி.

ஒரு சிலர் இக் கொடிய வழக்கத்துக்கு ஆளாயிருக்கிறார்கள். பெருந் திரளான பிராமண ரல்லாதாரில் பால்ய விவாகக் கொடுமையே இல்லை. ஆகையால் இந்தச் சட்டம் பெரும்பாலும் பிராமணர்களையே பாதிக்கின்றது. அறிவுள்ள பிராமணர்களும், ஆற்றல் படைத்த வாலிபப் பிராமணர்களும் இந்தச் சட்டத்தை ஆதரிப்பதைக் கண்டு அகமகிழ்ச்சி அடைகிறோம். ஆனால், கதைக்குதவாத வைதிகப் பிராமணர்கள் மட்டும் ஷை சட்டத்தை எதிர்க்கிறார்கள். ஆகையால் பகுத்தறிவை உபயோகியாத வைதிகர்கள் போடும் வெறுங் கூச்சலைக் கண்டு யாரும் பயப்படக்கூடாதென்று கேட்டுக்கொள்ளுகிறோம். பால்ய விவாகத் தடைச் சட்டம், இந்திய மக்கள் யாவருக்கும் பொதுவாகவே ஏற்படப் போகின்றது. ஹிந்து, முஸ்லிம், பார்ஸி, கிறிஸ்தவர் போன்ற எச்சமூகத்திலும், பால்ய விவாகம் கூடாதென்பதே சாரதா சட்டத்தின் கருத்தாகையால், வைதிகப் பிராமணர்கள் மட்டும் கூச்சல் போடுவதில் பயனில்லை. இச் சட்டத்தை ஆதரிக்கும்படி சர்வ ஜனங்களையும் வேண்டிக் கொள்ளுகிறோம்.

ஃ ஃ ஃ

"மலக்குறி" என்னும் விஷயம்பற்றி திருநெல்லைச்சுந்தரனார் 'மருத்துவ'னில் வரைந்திருக்கும் கட்டுரை வருமாறு:—

நோயைக் கண்டறிவதற்குள்ள பல்வகைக் குறிகளில் மலக்குறி ஒன்றாகும். ஆகையால் மலத்தின் நிறம், மணம், தன்மை முதலியவைகளை ஆராய்ந்து பிணியைக் கண்டறிவது மருத்துவர்களின் கடமையாகும்: சாதாரணமாய்க் கழியுமலமானது இறுகலாய் உணவுக்குத் தக்கவாறு, மஞ்சள் தவிடு முதலிய நிறங்களை உடையதாயிருக்கும். பருப்புக் காய் கறிகளை மிகுந்து உண்போரின் மலத்தின் நிறமும், புலால் அருந்துவோரின் மலத்தின் நிறமும் கொஞ்சம் வேற்றுமை யுடையதாயிருக்கும். மலத்தின் நாற்றமானது உணவைப் பொறுத்திருக்கும். தவிரவும் பித்தநீர், மலச்சிக்கல் முதலியவைகளையும் ஒரு சிறிது தழுவிநிற்கும். பால் குடிக்கும் குழந்தைகளின் மலம் புளிப்பு மணம் வீசும். புலால் அருந்துவோர் மலம் மிகுந்த துர் நாற்றம் உடையதாயிருக்கும்.

மலத்தின் அளவானது உட்செல்லுகிற உணவின் அளவையும், உட்செல்லும் பதார்த்தங்களின் தன்மையையும் சம்பந்தித்திருக்கும். சாதாரணமாய் எப்பொழுதும் அரிசி, பருப்பு, காய்கறிகளை மிகுந்து உண்போருக்கு மலம் ஆகாரத்துக்குத் தக்கவாறு மிகுந்து கழியும். கோதுமை, புலால் முட்டை முதலியவைகளை மிகுந்து உண்போருக்கு மலம் சுருக்கமாய் கழியும். காரணம் என்னவென்றால் பருப்பு, கீரை, காய்கறிகள், மிதமியான சக்கைகளை கழிக்கின்றன. புலால், முட்டை முதலியவைகள் சத்துக்களாக மாறி உடம்பில் சார்ந்து விடுகிறபடியால் மலம் மிதமியாகக் கழியாது. முற்கூறியவைகள் இயற்கையாய்க் கழியும் மலங்களைப் பற்றியேயாம். இனிமேல் இயற்கைக்குமாறாகக் காணப்படுகிற மலத்தின் நிறத்தையும், தன்மையையும் ஆராய்வோம். மலமானது வெளுத்து களிமண் நிறம்போல் காணப்படுமானால் மஞ்சட்காமாலையையாவது பித்த சோகையையாவது குறிக்குமென்றறிக. மஞ்சள் நிறமான நீர், தோற்றம், பார்வை, காடியில் சாந்தமான பித்தத்தின்நடை மஞ்சட்காமாலையைத் தெரிவிக்கும். நகக்கண், நாக்கு, கண்களின் சவ்வுவெளுத்திருத்தல், மண், செங்கல், சாம்பல் முதலியவைகளின் விருப்பம் முதலியவைகள் பித்தசோகையைக் குறிக்கும். மிகவும் இறுகிய நிறத்துடன் காணப்படும் மலமானது சிறுகுடல் புண்ணையாவது, அயம் அல்லது பொன்னிமிளை மருந்து சாப்பிடுவதையாவது குறிக்கும். மிகவும் இறுக்கமாய் வறண்டு தோன்றும் மலமானது உட்கொண்ட தண்ணீர் அளவின் குறைவையும் மூலச்சூட்டையும் குறிக்கும். குழந்தைகளின் மலம் புளித்த நாற்றம் தருமானால், தாய்ப்பால் சீர்த்துப்போய்விட்ட

தென்றாவது அல்லது மலம் குடலில் தொக்கல் விழுந்து விட்டதென்றாவது தெரிவிக்கும். மலச்சிக்கலானது பல பிணிகளுக்குக் காரணமாயும் பிணியின் முக்கியமான குறியாயுமிருக்கிறது. மலச்சிக்கல், அஜீரணம், சோம்பல், மனத்தளர்ச்சி, கைகால் சோர்வு, தலைவலி, பசிமந்தம், நாக்குப்புண், துர்நாற்றம் முதலியவைகளை உண்டுபண்ணுகின்றது. இன்னும் மூலநோய், குடல் வப்பிசம், பிட்டிவலி முதலிய வாயுக்களையும் உண்டுபண்ணுகின்றது. மலச்சிக்கலுக்குக் காரணங்கள் பலவுள. (க) மிகுந்த உணவு (உ) மிகவும் குறைந்த உணவு (ங) மிருக மாமிசங்களின் உணவு (ச) குறைந்த காய்கறி பதார்த்தங்களைக்கூடிய உணவு (ரு) உணவில் எண்ணெய் அல்லது நெய்யின் குறைவு (சு) உட்கொள்ளும் நீரின் குறைவு (எ) உண்ணும்பொழுதாவது முடிந்தஉடனேயாவது மிகுந்த நீர் குடிக்கல் (அ) நன்றாய் பழுக்காத பழங்கள் முதலியவைகளை தின்றல். (கூ) நாள் முழுவதும் உடற்பயிற்சி இல்லாமல் உட்கார்ந்த தொழில் செய்தல், மலத்தை அடக்குதல் (கo) கொழுப்பால் மிகவும் பருத்த உடம்பு (கக) சிறுகுடல் பெருங்குடல்களின் பலவீனம் (கஉ) சிறுகுடல் பெருங்குடல் முதலியவைகளில்கட்டி, கிருமி, மேற்படி சிறுகுடல்மாறி விழுதல், மணிக்குடல், பெருங்குடல்கள் வியாதியால் விரிந்து போகுதல் அல்லது சுருங்கிப்போகுதல், இரத்தக்குறைவான பிணிகள், நரம்புத்தளர்ச்சியான வியாதிகள் ஆகிய பலவுமாம். சில பேதி மருந்துகள் வயிற்றோட்டத்தைக் கொடுத்து பின்னால் மலச்சிக்கலை ஏற்படுத்துவதும் உண்டு. பால்குடிக்குஞ் சிறுவர்களுக்கு ஏற்படும் மலச்சிக்கலுக்கு முக்கியமான சில காரணங்கள் உண்டு. உதாரணமாகப் பத்து மாதத்திற்குமுன் பிரசவித்ததாயின் பாலும், ஒன்பது மாதத்திற்கு மேற்பட்ட பசுவின் பாலும் குழந்தைகளுக்குச் சில வேளை மலச்சிக்கலை உண்டுபண்ணும். புட்டிப்பால் சில குழந்தைகளுக்கு மலச்சிக்கலை உண்டுபண்ணும். குடலேற்றம், முதலிய பல பிணியும் மலச்சிக்கலை உண்டுபண்ணும்.

ஃ ஃ ஃ

"நாம் உண்ணும் காய்கறிகளும், அவற்றின் குணங்களும்" என்பது பற்றி 'ஆரோக்கிய தீபிகை' வரைந்திருப்பது வருமாறு:—

நம்முடைய ஆகாரத்தில் காய்கறிகள் அவசியமான பதார்த்தங்களாக விருக்கின்றன. மாமிச உணவு இல்லாமலே ஒருவன் நல்ல ஆரோக்கியத்துடன் ஜீவித்திருக்கலாம். ஆனால் காய்கறிகளை நிவர்த்தித்தாலோ நாம் நம்முடைய தேகத்தில் வியாதியை உற்பத்தி செய்துகொள்ளுதலாகும். ஆனதுபற்றி நாம் உண்ணும் காய்கறிகளின் குணநலங்களையும் அவைகள் ஆகாரமாகவும் மருந்தாகவும் உபயோகப்படும் தன்மையையும் குறித்துக்கொஞ்சமாகிலும் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். அதனால்நாம் நல்லவை இவை கெட்டவை இவை என்று பகுத்தறிந்து நம்முடைய ஆகாரத்தை சரியானபடி திட்டப்படுத்திக்கொள்ளலாம். யாவராலும் உண்ணப்படுவதும் காய்கறிகளுள் சாதாரணமாய் யாவருக்கும் தெரிந்திருப்பதுமான உருளைக்கிழங்கை முதல் முதல் எடுத்துக்கொள்வோம். தினசரி உபயோகப்படுத்தும் ஆகாரப்பதார்த்தங்களுள் மிகவும் ரம்மியமானது உருளைக்கிழங்கு. ஆனால் பச்சைக்கிழங்கில் கOOக்கு எகு வீதம் ஜலம் இருப்பதால், அதை மற்ற ஆகாரப் பதார்த்தங்களுடன் சேர்த்துப் புசிக்கவேண்டும். அதில் உப்புவாயுப் பதார்த்தங்கள் மிகக் குறைவாயிருப்பதால், அதைத் தனியாய் புசிக்க யோக்யதையில்லை. உருளைக்கிழங்கானது பூ போன்றும் மா போன்றும் மெதுவாயிருந்தால் சீக்கிரத்தில் ஜீரணமாகிவிடும். கெட்டியாய் ஜலம் கோத்துக்கொண்டு பசைபோல் ஒட்டிக்கொள்ளும்படியானதாயிருந்தால், அம்மாதிரி உருளைக்கிழங்கு ஜீரணமாவது கடினம். இரப்பை பலஹீனப்பட்டிருப்பவர்கள் இம்மாதிரி கிழங்கைத் தவிர்க்கவேண்டும். இளங்கிழங்கு

காட்டப்பட்ட கிழங்குகளைவிட சற்று குறைவாயிருக்கும். ஆனால் அது ஜீரணமாகக் கூடியதல்ல. உருளைக்கிழங்குக்கு சொறி கரப்பான் வியாதியை நீக்கிக்கும் சக்தி உண்டு. இந்த வியாதிக்கு உருளைக்கிழங்கு ஏற்றதாகுமென்று யாவரும் ஒருங்கே அபிப்பிராயப் பட்டிருக்கிறார்கள்.

கத்தரிக்காய் இந்தியாவில் ஏராளமாய் பயிராக்கப்பட்டு ஆகாரப் பதார்த்தமாக எங்கும் உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது. பிஞ்சுக் கத்தரிக்காயானது, சளியைப் போக்கி, வாயுவைக் கண்டிக்கும். முதிர்ந்ததோ, காரிப்பைக் கொடுக்கும்; பித்தத்தை உண்டுபண்ணக்கூடியது. கத்தரிச்செடியின் பச்சை இலைகளில் சொறி கரப்பான் வியாதியைப் போக்கும் குணமுள்ள வி. ஜீவனத்துப் பொருள்கள் நிரம்ப இருக்கின்றன.

வெண்டைக்காயானது, மற்றொரு முக்கியமான ஆகாரப்பதார்த்தமாகும். அதன் குணங்களாவன: சுவைக்கு மிருதுவாய் விருப்பத் தக்கது; இருமலை நாசமாக்கும் வகை செய்யக்கூடியது; குளிர்ச்சியுள்ளது; வீரிய விருத்தியை உண்டுபண்ணக்கூடியது. ஜுரங்களுக்கு இது உபயோகமான வகையது; தொண்டை ரணம், ஜலதோஷங்களின் முதிர அவயவங்கள் இவற்றில் எரிச்சல் ஆகியவற்றைப்போக்கும்; சட்ட புண், வலி, சிறுநீர் விடுவதில் ஏற்படுங் கஷ்டம் ஆகிய இத்தகைய சம்பவங்களில் குணத்தைத்தரக்கூடியது. முக்கியமாய் சாட்டப்பட்ட சிதபேதியில், இதன் மிருதவான பசை அதிக பலனைக்கொடுக்கக்கூடியது. இதை குழம்பாய் (ஸூப்) சமைத்து சாப்பிடுவது உத்தமம். இதில் பாஸ்பாரிக் ஆஸிட் இருப்பதால் மூளைக்கு இது தகுந்த ஆகாரப் பதார்த்தமாகும்.

வெங்காயம்: இதில் கந்தகம் கலந்திருப்பதால் தேகத்திற்கு ஆரோக்கியத்தைத்தரக் கூடிய குணங்கள் அதிகம் இருக்கின்றன. கந்தகம் நமது தேகத்திற்கு அவசியமான பதார்த்தம். ஆனதுபற்றி அது குறைவுப்படுகையில், அதைப் பூர்த்திசெய்யும் பொருட்டு, நமது ஆகாரப் பதார்த்தங்கள் மூலமாய் அதை உட்செலுத்தவேண்டும். அதிரம்மியமாயும் இலகுவில் ஜீரணமாகக் கூடியதுமாயும் இருக்கத்தக்க வஸ்துக்களில் தன்னுபடி செய்யப்பட்டது வெங்காயம் ஒன்றே. நாம் நல்ல ஆரோக்கியத்தை அனுபவிக்க வேண்டுமானால் தேக சாஸ்திர விதிப்படி வெங்காயம் நமக்கு அவசியமான உணவாகவேண்டும். சொதிக்கவைத்தோ வறுத்தோ அல்லது சுண்டியோ நன்றாகச் சமைத்து சாப்பிடும் பக்ஷத்தில், அது சுளுவில் ஜீரணமாகி, தேகத்திற்குவேண்டிய போஷணை பதார்த்தங்களையும் கந்தகத்தையும் கொடுக்கும்.

கோசுக்கீரை முதலிய பச்சை மரக்கறிகளில் ஆகாரப் பதார்த்தங்களாக உபயோகப்படும்படியான வஸ்துக்கள் ஒன்றுமில்லை. ஆகிலும் மற்ற வஸ்துக்களுடன் கலந்து உண்ணும்போது அவை முக்கியமான ஆகாரப் பதார்த்தங்களாகின்றன. அவை இரத்தத்தை சுத்திசெய்து மலத்தைக் கழிக்கக்கூடியன. பசலிக்கீரை (Spinach) யில் இரும்பு இருப்பதால் அது இரத்தக் குறைவுள்ளவர்களுக்கு நல்லது.

கடைசியாக, யாவராலும் விரும்பப்படும் வாழையை எடுத்துக்கொள்வோம். இது இந்தியா முழுவதிலும் அநேகவிதங்களாகப் பயிராக்கப்படுகிறது. அதிமதுரமும் அதி போஷிப்புமுள்ள பழங்களில் பேர்போனது வாழைப்பழம். வாழைக்காய் வாழைப்பூ, வாழைத்தண்டு இவை யாவும் ஆகாரப் பதார்த்தங்களாக உபயோகப்படுகின்றன. நன்றாய்ப் பழுத்த பழத்தில் கOO-க்கு உஉ சர்க்கரை இருக்கிறது. அதில் கOO-க்கு கக பங்கு கட்டியாகக் கட்டிக்கொள்ளும் குணமுடையது. அதில் சர்க்கரை தவிர, கஞ்சி பசையும் கOO-க்கு சஅ பங்கு ஆல்பியூமினாய்டுகளும், கOO-க்கு ஒரு பங்கு கொழுப்பும், உப்பு வாயு சம்பந்தமற்ற பதார்த்தங்கள் கOO-க்கு க முதல் கஙு பங்கும், பாஸ்பாரிக் ஆன்ஹைட்ரைட், சுண்ணாம்பு, ஆல்கலிகள், இரும்பு, க்ளோரைன் முதலிய சாம்பல் வகைகளும் இருக்கின்றன. அவற்றின் பீ (B) ஜீவஸத்துப் பொருள்களும் ஸி (C) ஜீவஸத்துப்பொருள்களும் ஏராளமாய் இருக்கின்றன. அதில் கொஞ்சம் ஏ (A) ஜீவஸத்துப் பொருளும் இருப்பதாகத் தெரியவருகிறது. வாழைப்பழத்திலுள்ள ஜீவஸத்துப் பொருள்கள் தேகம் வளருவதற்கு உபயோகமாயுள்ளன. வாழைக்காயில் டானின் அதிகமாய் இருக்கிறது. உருளைக்கிழங்கிலுள்ள கஞ்சிப்பசை இதிலும் உண்டு. ஆனால் அதிலுள்ள போஷணை சக்தி இதிலில்லை. வாழைப்பூத் தண்டின் ரஸத்தில் போடாஷ், ஸோடா, சுண்ணாம்பு, மக்னீஷியா, அலியூமினா, பெரிக் திராவகம், க்லோரைன், ஸல்ப்யூரிக் ஆன்ஹைட்ரெட், ஸிலிகா, கார்பன், ஆன்ஹைட்ரைட் முதலியன அடங்கியுள்ளன. இளம் வேர்களின் ரஸத்தில் டானின் அதிகம் உண்டு.

வாழைப்பழம் மிருதப்படுத்தும் குணத்தையும் போஷணை சக்தியையும் உடையது. வாழைக்காயோ குளிர்ச்சியுள்ளது. சீதத்தைக்கட்டும் குணமுடையது. உலர்த்தால் சொறி கரப்பானை போக்கக்கூடியது. நன்றாய்ப் பழுத்த பழத்தை காலையில் சாப்பிட்டால் அது மலத்தைக் கழிக்கும். வேர் பித்தத்தை சமனம் செய்யக்கூடியது. மேலும் அது உத்தமமான மருந்தாகக் கருதப்படுகிறது. வாழையானது போஷிப்புத் தரத்தக்க ஆகாரம். வாழை, மரத்திலேயே பழுக்கால் மிக நல்லது. தண்டை விட்டுப் பிரிக்க பிறகு பழுத்தாலோ அது அவ்வளவு ஆரோக்கியகாமான தல்ல. வாழைக்காய் நீரழிவால் வருந்துவோர்க்கு சிரேஷ்டமான ஆகாரமாகும். அதை உலர்த்தி சர்க்கரை கலந்து சாப்பிட்டால் சொறி கரப்பான் வராது. அது மலப்போக்கிற்கும் உபயோகமுள்ளது. வாழைக்காயை வெய்யலில் உலர்த்தி மாவாக்கி அதினின்றும் சப்பாத்தி செய்தால் அது மாந்தம் புளிப்பு, குன்மம் முதலிய வியாதிகளுக்கு ஏற்ற ஔஷதமாகும். வாழை மாவில் பால் சேர்த்து கஞ்சி காய்ச்சி சாப்பிட்டால் சீக்கிரத்தில் ஜீரணமாகி வாயுவைக் கண்டிக்கும். வாழைப்பூவையும், இளந்தண்டையும் கறி சமைக்கலாம். பூவின் ரஸத்தில் தயிர் சேர்த்து சாப்பிட்டால் நோவுடன் கூடிய மாதவிடாயையும், மாதவிடாயும்போது காணும் அபரிதமான இரத்தப்பெருக்கையும் போக்கும். சமைத்த பூ நீரிழிவுக்கு உபயோகமானது.

---



# செய்தித்திரட்டு.

## பிரிட்டிஷ் முதன் மந்திரியின் அமெரிக்கப் பிரயாணம்.

பிரிட்டிஷ் முதன் மந்திரி மிஸ்டர் மாக்டொனல்டு அக்டோபர் ச-ம் தேதி நியூயார்க்குச்செல்கின்றார். வாஷிங்டனில் கO-ம் தேதிவரைத் தங்குவார். நயாகரா நீர் வீழ்ச்சி முதலியவற்றைப் பார்வையிட்டு விட்டு அக்டோபர் உரு-ம் தேதி இங்கிலாந்துக்குப் புறப்படுவார். இருதேசங்களினடையும் நேசப்பான்மையை வளர்க்கவே அவர் அமெரிக்கா செல்கின்றார் எனத் தெரிகிறது.

## பாலஸ்தீனக் கலவரம். யூதர்கள்மீது நடவடிக்கை.

பாலஸ்தீனத்தில் நடைபெற்ற கலகத்தை யொட்டி சச யூதர்கள்மீது கொலைக் குற்றஞ் சாட்டப்பட்டு விசாரணைநடக்கிறதென ஜெருஸலம் செய்தி கூறுகின்றது. யூதர் கடைகளுக்கெதிரில் அராபிய இளைஞர்கள் பகிஷ்காரப் பிரசாரஞ் செய்வதைக் கலைத்துவிடுவதாக ஜில்லாக் கமிஷனர் தெரிவித்திருக்கின்றார்.

## பருத்தி விளைவு.

ஸெப்டம்பர் சஅ-ம் தேதி பார்ஸிலோனாவில் கசு-வது சர்வதேசப் பருத்திக் கைத்தொழில் மகாநாடுகூடியது. இந்தியா, இங்கிலாந்து, எகிப்து, ஜப்பான் முதலிய பல தேசங்களிலிருந்தும் ருOO பிரதிநிதிகள் விஜயஞ் செய்திருந்தனர். சென்ற உரு வருடங்களில் கO லட்சம் பேல் பருத்தி புதிய பருத்தி நிலங்களில் உற்பத்தி செய்யப்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டது.

## பாரிஸில் கொலை.

பாரிஸ் குற்ற விசாரணை இலாகா தலைவரான மிஸ்டர் பேயல் நீதிமன்றத்திலுள்ள தமது ஆபீஸுக்கு ஏறிச்செல்லும்போது சுட்டுக் கொல்லப்பட்டாரென்றும், கொலைசெய்தவர் தெருவில் பிடிக்கப்பட்டார் என்றும் பாரிஸிலிருந்து அறிவிக்கப்பட்டிருக்கிறது.

---

கிறது. உருளைக்கிழங்கிலுள்ள கஞ்சிப்பசை இதிலும் உண்டு. ...

## ஆங்கில—கானடா வியாபார ஒப்பந்தம்.

கனடாவுக்கும் இங்கிலாந்துக்கும்வியாபார விஷயத்தில் ஒருவித ஏற்பாட்டை ஒழுங்குபடுத்த மிஸ்டர் தாமஸ் என்பவர் இங்கிலாந்திலிருந்து கானடாவுக்குச் சென்றார். இங்கிலாந்தின் வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்கும் வழியைக் கண்டுபிடிப்பதே அவரது பிரயாணத்தின் முக்கிய நோக்கம் எனக்கூறப்படுகிறது. கானடாவிலிருந்து இங்கிலாந்து அதிக கோதுமையை வாங்கவும், இதற்குப்பதிலாக கானடா இங்கிலாந்திலிருந்து நிலக்கரியை வாங்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதென டெயிலிஹெரால்டு பத்திரிகை கூறுகிறது.

## லாட்டரி மோசடி.

கோவா லாட்டரியை யொட்டிப் பொய் டிக்கட்டுகள் போட்டு விற்றதற்காக பம்பாயில் எண்மர் கைதுசெய்யப்பட்டிருக்கின்றனர். கருOO பொய் டிக்கட்டுகள் கைப்பற்றப்பட்டிருக்கின்றன.

## ஜர்மன் கப்பலில் ராஜத் துரோகி.

"ஸ்டோல் ஸென் பெல்லர்" என்ற ஜர்மன் கப்பல் ஆகஸ்டு உO-ம் தேதி காரச்சி வந்தபோது, கடற்சுங்க உத்தியோகஸ்தர்கள் அதைச் சோதனை செய்தனர். குலாம் மகமத் ஆலி என்பவன்மீது ராஜத்துவேஷக்குற்றஞ் சாட்டப்பட்டு வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. இவன் முன்னால் அமிர்த சரஸில் வசித்து வந்ததாகவும், இவன் புரட்சிக் கூட்டத்தைச் சேர்ந்தவனென்றும், இந்தியத் துறைமுகங்களில் கடும் ராஜி விக்தனையடங்கிய புத்தகங்களைக் கொண்டுவருவதாகவும், இவன் கப்பல் வேலையாளி அல்லவென்றும் கூறப்படுகிறது. வேறு பல கடிதங்களும் அவனிடமிருந்து கைப்பற்றப் பட்டன.

## பம்பாயில் நூதன நோய்.

பம்பாய் ஸெயின்ற் ஜார்ஜ் ஆஸ்பத்திரியில் தோன்றியுள்ள புதிய வியாதி அங்குள்ள காக்கைகளையும் பீடித்திருப்பதாகவும் அதனால் பல காகங்கள் இறந்துவிடுவதாகவும் தெரிகிறது.

## அமெரிக்கரின் நன்கொடை.

பாக்தாதில் ஒரு விநோதக் காட்சி சாலை கட்டுவதற்காக ஒரு சிறந்த கட்டிடம் கட்ட அமெரிக்கப் பிரபு ஒருவர் உ லட்சம் டாலர்கள் நன்கொடை யளித்துள்ளார். கட்டிடவேலை ஆரம்பமாய்விட்டதெனத் தெரிகிறது.

---

## யதீன்தாஸுக்குஞாபகச்சின்னம்.

உண்ணா விரதம் கிடந்து உயிர் துறந்த திரு. யதீன்தாஸுக்கு ஒரு ஞாபகச் சின்னமேற்படுத்த உ லட்சம் ரூபாய் வேண்டுமென சுபாஷ் சந்திரபோஸ் ஒரு வேண்டுகோள் வெளியிட்டிருக்கிறார்.

---

## வேலை நிறுத்தம்

யதீன்தாஸின் மரணத்தை முன்னிட்டு ங லட்சம் தொழிலாளர்கள் ஸெப்டம்பர் கஎ-ம் தேதி பிற்பகல் க மணி முதல் ரு மணி வரை கல்கத்தாவில் வேலை நிறுத்தஞ் செய்தனர்.

## முனிஸிபல் கூட்டம் ஒத்திவைக்கப்பட்டது.

யதீன்தாஸின் மரணத்தை முன்னிட்டு டில்லி முனிஸிபாலிடியின் கூட்டம் ஸெப்டம்பர் கஎ-ம்தேதி ஒத்திவைக்கப்பட்டது.

## போங்கி விஜயா.

### சிறையில் உயிர் நீத்தார்.

போங்கி விஜயா, ஸெப்டம்பர் ககூ-ம் தேதி இரங்கூன் சிறை ஆஸ்பத்திரியில் இறந்துவிட்டார். அவர் ராஜத்துவேஷக் குற்றத்திற்காகச் சிறைத் தண்டனை அனுபவித்து வந்தார். சிறையிலுள்ள போங்கிகள் சில விசேஷதினங்களில் மஞ்சள் உடை தரிக்கவும், மாத நோன்பு நாட்களில் உபவாஸமிருக்கவும் அனுமதி கொடுக்கவேண்டுமென்று கோரி, ஏப்ரல் ரு-ம்தேதி முதல் உண்ணாவிரத மாரம்பித்தார். கவர்ன்மெண்டார் இணங்காததால் விரதம்நீண்டுவந்தது.

---

# காரைக்குடி முனிசிபாலிடி.

(நமது நிருபர்)

ஸெப்டம்பர் உO-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை காரைக்குடி முனிஸிபல் கௌன்ஸிலின் கூட்டமொன்று தலைவர் திரு. ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. அன்று முடிவு செய்யப்பட்ட முக்கியமான விஷயங்கள் வருமாறு:—

## எஸ்டிமேட்டுகள்.

முனிஸிபல் மெடிகல் ஆபீஸருடைய கட்டிடத்தைப் பழுது பார்க்க ரூ. கசO; முனிஸிபல் வைத்தியசாலை காம்பவுண்டுக்குள் வைசூரி வைக்கும் கொட்டகை ஒன்று போட ரூ. சகரு; கழனிவாசலுக்கு வடக்கே உO-ம் நம்பர் ரஸ்தாவிலிருந்து ஙஅ-ம் நம்பர் பாலம் வரை கஅ-ம் நம்பர் ரஸ்தாவைப் பரிபாலிக்க ரூ. உOOO ஆகிய எஸ்டிமேட்டுகளும், வேறு சில சில்லரை எஸ்டிமேட்டுகளும் அனுமதிக்கப்பட்டன.

## வண்டி நிறுத்தும் இடம்.

முனிஸிபாலிடியைச் சேர்ந்த குப்பைவண்டிகளை நிறுத்த ஒரு வாடகை இடம் அமர்த்தவேண்டுமென்ற விஷயம் மறு கூட்டத்திற்கு ஒத்திவைக்கப்பட்டது.

## கூலிகள் நியமனம்.

உடனுக்குடன் பழுதுபார்க்கவேண்டிய ரஸ்தாக்கள், வீதிகள் பல இருப்பதால் அதற்காக உ ரோடு கூலிகளும், ங சித்தாள்களும் நியமிக்க அனுமதிக்கப்பட்டது.

## காரியதரிசிக்கு அதிகாரம்.

முனிஸிபாலிடிக்குச் செலுத்தப்படும் தொகைகளுக்கு முனிஸிபல் காரியதரிசியே ரஸீது கொடுக்கலாமென முடிவு செய்யப்பட்டது.

## முனிஸிபல் எல்லை.

முனிஸிபல் தெற்கு எல்லையை விஸ்தரிக்கும் விஷயமாய் எ—ங—உகூ-ம் தேதி தீர்மானமும், அதன்மீது கவர்ன்மெண்டார் அனுப்பிய பதிலும் படிக்கப்பட்டன. விஸ்தரிக்கப்படும் இடத்தில் எத்தனை கட்டிடங்க ளிருக்கின்றனவென்றும், எல்லையை விஸ்தரிப்பதில் முனிஸிபாலிடிக்கு எவ்வளவு வருமானம் அதிகமாய்க் கிடைக்குமென்றும் விபரம் அறிவிக்குமாறு கவர்ன்மெண்டார் கேட்டிருக்கின்றனர். ஆதித்திராவிட மாணவரில்லம் அமைப்பதற்காகவே எல்லையை விஸ்தரிக்கவேண்டுமெனக் கோரப்பட்டதாலும், அவ்விதம் எல்லை விஸ்தரிக்கப்பட்டால் முனிஸிபாலிடிக்கு அதிகமான ரோடுகளைப் பரிபாலிக்க வேண்டி வருமாதலால் அதிகச் செலவு ஏற்படக்கூடுமென்றும், எல்லையை விஸ்தரிக்காமலே முனிஸிபல் எல்லைக்கு வெளியில் கட்டிடம் கட்ட கவுன்ஸிலோடு கூடிய கவர்னரிடமிருந்து அனுமதி பெறலாமென்றும் தலைவர் தெரிவித்தார். எனவே, இதைப்பற்றி ரயில்வே வசதி ஏற்பட்ட பிறகு கவனிக்கலாமென முடிவு செய்யப்பட்டது.

## சுங்கவரி.

முனிஸிபல் சுங்கவரியில் ஐந்திலொரு பங்கை இராமனாதபுரம் ஜில்லா போர்டுக்குக் கொடுக்கவேண்டுமென்று ஷை ஜில்லாபோர்டு செய்திருக்கும் தீர்மானம் ஆலோசனை செய்யப்பட்ட போது, இதுபற்றி பிற முனிஸிபாலிடிகளுக்கு எழுதித் தகவல் தெரிந்து முடிவு செய்வதெனத் தீர்மானிக்கப்பட்டது.

## வைத்திய புஸ்தகசாலை.

இராமநாதபுரம் ஜில்லா வைத்திய புத்தகசாலையைப் பரிபாலிக்க ரூ. ரு உதவி செய்வதென முடிவு செய்யப்பட்டது.

## பன்றிகள்.

நகரில் அலைந்து திரியும் பன்றிகளைக் கொல்லவேண்டுமென உஅ-ங-உகூ-ம் தேதி தீர்மானத்தின் மேல் நகருக்குள் பன்றி வளர்க்க லைசென்ஸ் கொடுப்பதை நிறுத்திவிடுவதெனத் தீர்மானிக்கப்பட்டது.

## அலைந்துதிரியும் நாய்கள்.

முனிஸிபல் எல்லைக்குள் அலைந்து திரியும் நாய்களைக் கொல்லுவதற்காக சுமார் ரூ. கருO செலவில் ஒரு தனிக் கட்டிடம்கட்ட அனுமதிக்கப்பட்டது.

## குழாய் மெக்கானிக்.

நகரிலுள்ள சகல குழாய்களையும் பழுது பார்க்க ஒரு மெக்கானிக் நியமிக்க அனுமதிக்கப்பட்டது.

## கியாஸ் லைட்.

நகரின் பல பாகங்களிலும் கூடுதலாக கO-கியாஸ்லைட்டுகள்போடவேண்டுமென்ற விஷயம் அடுத்த கூட்டத்திற்கு ஒத்தி வைக்கப்பட்டது.

## பொதுக் கக்கூஸ்.

முத்துப்பட்டணத்தில், முனிஸிபல் ஸர்வேயர் குறிப்பிட்டிருக்கும் இடத்தில்ஒரு பொதுக் கக்கூஸ் கட்டத் தீர்மானிக்கப்பட்டது.

## அப்பீல் கமிட்டி.

முனிஸிபல் ரிப்பன்களின் அப்பீல் கமிட்டிக்கு திரு. ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியார் அவர்களுக்குப் பதிலாக திரு. வெ. ராம. வெ. ராமசாமிச் செட்டியாரவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## ஸ்டீம் ரோலர்.

முனிஸிபல் எல்லைக் குட்பட்ட ரோடுகளில் உபயோகிப்பதற்காக கூடுன் ஸ்டீம் ரோலர் வாங்க அனுமதிக்கப்பட்டது.

## ஓவர்ஸியர்.

ரூ. அO-எரு-கரு சம்பளத்தில் ஓவர்ஸியர் கிடைக்கவில்லை யாதலால் கருO-கO-உருO ரூ. சம்பளத்தில் ஒருவரை நியமிப்பதென முடிவு செய்யப்பட்டது.

## ஷாப் ஷெக்யூரிடி.

ஷாப் வேலைக்கு செக்யூரிடியாக உOO ரூ ரொக்க ஜாமீனும், ருOO-ரூ. நபர் ஜாமீனும் வாங்குவதென முடிவு செய்யப்பட்டது.

## மின்சாரக் கம்பி.

நகரில் மின்சாரக் கம்பிகள் போடுவதைப் பற்றிய இராமநாதபுரம் ஜில்லாக் கலெக்டரவர்களுடைய கடிதம் படிக்கப்பெற்றது. கம்பிகள் போட எலக்டிரிக் கார்ப்பொரேஷனுக்கு அனுமதி கொடுக்கப்பட்டது.

---

# ஹென்ரி போர்டு.

திரு. ஆர். எம். பாக்ஸ்.

தற்கால உலகில் ஹென்ரி போர்டு மோட்டார் அரசாய்விளங்குகின்றார். அவரை ஒரு செயல் வீரர் என்று சொல்லலாம். வெறும் சொல் வீரரன்று. தாம் சொல்லுபவற்றைச் செயலிற் கொண்டுவந்து வெற்றி பெறும் தொழில் வீரர். பற்பலவிதமாக யோசனை செய்பவருக்கு அவர் ஒரு வழிகாட்டியாக விருக்கின்றார்.

மிச்சிகானைச் சேர்ந்த டியர்பான் தோட்டமொன்றில் ௧௮௬௩ ஜூலை ௩௦-ம் தேதி போர்டு இவ்வுலகில் தோன்றினார். பிறப்பிலேயே அவர் ஒரு இயந்திரத் தொழிலாளியெனக் கூறலாம். சிறு பருவ முதற்கொண்டே அவர் இயந்திரத்திலும், இயந்திர சாதனங்களிலும் தனது கருத்தைச் செலுத்தினார். ரோட்டில் கல்லிருத்தும் நீராவி வண்டியை அவர் தமது பன்னிரண்டாவது வயதில்தான் முதன் முதல் கண்டார். அதே வருடத்தில்தான் அவருக்கு ஒரு சிறு கடிகார இயந்திரமும் கிடைத்தது. இவ் விரு நிகழ்ச்சிகளும் அவரது வாழ்க்கையில் மிக முக்கியமானவை யென அவர் கூறுவதுண்டு. ஏனெனில், இயக்கும் இயந்திரமும் கால அளவும் சேர்ந்தே அவரை முன்னேறச் செய்தன.

ஒரு சிறு தொழிற்சாலையில் அவர் தமது ஆரம்பப் பயிற்சியைப் பெற்றார். அதிலிருந்துகொண்டே தமது நிலங்களைப் பண்படுத்துவதற் குரிய நீராவி இயந்திரமொன்றைச் செய்ய ஆரம்பித்தார். குதிரையின்றி ஓடும் வண்டி யொன்றை அவர் முதன்முதல் செய்தது இப்பொழுதுதான். அவர் தமது முயற்சியில் வெற்றி பெற்றாரெனினும் அந்த வண்டியின் அமைப்பும், தோற்றமும் இக்காலத்தவருக்குப் பிடிக்காதென்பது திண்ணம்.

ஹென்ரி போர்டின் தந்தையார் தமது புதல்வரின் திறமையை அறிந்தவரல்ல. ஹென்ரி போர்டு மண முடிக்க விரும்பிய போது இயந்திரத் தொழிலை விட்டுவிட்டு விவசாயத் தொழிலிற் புகவேண்டுமென்ற நிபந்தனையுடன் அவரது தந்தையார் நாற்பது ஏக்கர் நிலத்தைக் கொடுத்தார். போர்டு இந் நிபந்தனையை ஒப்புக்கொண்டாரெனினும் அவர் மனம் மட்டும் மாறவில்லை. தமது நிலத்தில் ஒரு மரமறுக்கும் தொழிற் சாலையையும், தூக்கிச் செல்லும் எஞ்சினையும் அமைத்தார். இவற்றின் மூலம் குடிசை கட்டுதற்கும், தொழிற்சாலை கட்டுதற்கும் வேண்டிய மரங்களை அவர் அறுத்துத் தயாரித்தார். இவ்விதமாக அவரது மணவாழ்க்கை ஆரம்பமாயிற்று. மீண்டும் அவர் தமது இயந்திரப் பரிசோதனைகளில் இறங்கினார். வெற்றியும் அவரைப் பின்தொடர்ந்தது. சிறிது காலத்திற் கப்பால் விவசாயத் தொழிலை விட்டுவிட்டு டெட்ராயிட் எலக்டிரிக் கம்பெனியில் ஒரு எஞ்சினீயராக அமர்ந்தார்.

ஹென்ரிபோர்டு செய்த முதல் மோட்டார் வண்டி ௧௮௯௨-ம் வருடத்தில் வெளிவந்தது. அந்நகரத்தில் பல நாட்களாக ஓடிக்கொண்டிருந்த முதல் மோட்டார் வண்டியும் அதுதான். நகர சபைத் தலைவரிடமிருந்து அவர் அனுமதி பெற்ற பிறகே அதை ஓட்டினார். அக்காலத்தில் அமெரிக்காவில் லைசென்ஸ் பெற்ற டிரைவர் அவர் ஒருவரே. ௧௯௨௧-ம் வருடம் மே மாதம் ௧௧-ம் தேதி அவரது தொழிற்சாலையிலிருந்து ௫,௦௦௦,௦௦௦ கார்கள் வெளிக்கிளம்பின.

அவரது முதல் வண்டி வெளிக் கிளம்பியபோது பற்பல கஷ்டங்கள் குறுக்கிட்டன. ரோடுகளெல்லாம் இக்காலத்தைப் போல் சௌகரியமாயிருக்கவில்லை. மேலும் அவர் பெட்ரோல் வாயுவைக் கொண்டு செய்த பரிசோதனைகளுக்குக் கம்பெனியார் இடங்கொடுக்கவில்லை. இப் பரிசோதனை பலன் தராது என அவர்கள் நினைத்தனர். ௧௮௦௨-ம் ஆண்டில் பல வியாபாரிகள் அவருக்கு உதவிபுரிய முன்வந்தனர்.

அக்காலத்தில் மோட்டார் வைத்திருப்பது வீண் ஆடம்பரத்தின் அறிகுறியெனக் கருதப்பட்டது. எனவே, கார்களின் தொகையைப் பெருக்கி விலையைக் குறைக்க வேண்டியது அவசியமென போர்டு கருதினார். ஆனால் 'அந்தக் கம்பெனியார் பணஞ் சம்பாதிப்பதில் கருத்துக்கொண்டனரேயன்றி மோட்டார் தயாரிப்பதில் கருத்துக்கொள்ளவில்லை; எனவே இரு வகையிலும் அவர்கள் தோல்வியுற்றார்கள்' என போர்டு கூறினார். போர்டு அக் கம்பெனியைவிட்டு விலகினார். முடிவாக போர்டு மோட்டார் கம்பெனி நிறுவப்பட்டது.

போர்டு மிகக் கூரிய புத்தியுள்ளவர். எதையும் அற்பமெனக் கருதமாட்டார். செட்டு, கழிவுக் குறைவு, திறமை, ஊழியம் ஆகிய சிறந்த குணங்களெல்லாம் அவரது அபார சக்தியைப் பெருக்கின. அவர் தொழில் செய்ததுமன்றி, உலகின் பொருளாதார முன்னேற்றத்துக்குரிய பல போதனைகளையும் கற்பித்தார். ஒவ்வொருவனும் தனக்குரிய இடத்திலிருந்து தனக்குரிய வேலைகளைச் செய்தால் வெற்றிபெறலாமென்பது அவர் வாழ்க்கையினின்றும் அறிந்த உண்மை. அதே கருத்தில்தான் அவரும் தொழில் நடத்துகிறார். வேலைக்காக எதையும் தியாகஞ்செய்யத் தயாராயிருக்கவேண்டும். முதலிடாது, உழைக்காது பலன்பெற நினைக்கும் முதலாளிகளை அவர் வெறுக்கிறார். ஏராளமான உற்பத்தியிலேயே பலனிருக்கிற தென்பது ஹென்ரி போர்டின் உபதேசம். பொருளைப் பார்த்து வேலையைக் கட்டுப்படுத்துவது தொடர்ச்சியான ஊழியத்தைக் கெடுக்கிறதென்று அவர் கூறுகிறார்.

போர்டு மோட்டார் தொழிற்சாலையில் வேலை நடக்கும் முறை கூர்ந்து நோக்கத்தக்கதாகும். சேஸிஸ் சேர்க்கும் வேலை ௧௨ நிமிடத்திற்கு ஆறடி வீதம் நடைபெறுகிறது. முன் சக்கர அச்சு வேலை நிமிடத்திற்கு நூற்று எண்பத்தொன்பது அங்குல வீதம் நடைபெறுகிறது. சேஸிஸ் அமைப்பில் நாற்பத்தைந்து தனி அமைப்புக்களிருக்கின்றன. இவை யாவும் நாற்பத்தைந்து கூட்டத்தாரால் பூட்டப்படுகின்றன. மூதற் கூட்டத்தார் நாலு மட்கார்டு பிராக்கட்டுகளைப் பூட்டிவிடுகின்றனர். ஒரு திருகாணியை மாட்டுபவன் அத்துடன் நட்டையும் மாட்டுவதில்லை. நட்டை மாட்டுபவன் அதைத் திருகுவதில்லை. நாற்பத்து நாலாவது அமைப்பில் ரேடியேட்டரில் நீர் நிரப்பப்படுகிறது. நாற்பத்தைந்தில் கார் வெளியில் வருகின்றது.

இவ்விதமாக போர்டு கார் செய்யப்படுகிறது. ஒவ்வொரு தொழிலாளிக்கும் ஒவ்வொரு வேலைக்கும் கால அமைப்பு குறிப்பிடப்படுகிறது. ஒவ்வொரு வேலையும் பல பிரிவுகளாகப் பிரிக்கப்படுகிறது. ஒருவர் சேர்த்த மோட்டாரை இப்பொழுது எண்பத்தினாலு மனிதர்கள் சேர்க்கிறார்கள். இம் முறையே காருக்கு விலையைக் குறைத்தது. நமது நாட்டில் வேறுவிதமாயிருப்பினும் அமெரிக்காவில் மட்டுமாவது கார் வைத்திருப்பது ஆடம்பர வாழ்க்கையாகக் கருதப்படவில்லை. மேலும் தொழிலாளிகளின் ஊதியமும் உயர்த்தப்பட்டிருக்கிறது. போர்டுத் தொழிற்சாலைகளில் வியாபாரக் கூட்டுறவுகளுக்கோ, தொழிற்சாலைக் கமிட்டிகளுக்கோ இடமில்லை. போர்டுத் தொழிற்சாலையில் தொடர்புள்ள ஒவ்வொருவரும் தொழிலுக்கு ஊழியரென எதிர்பார்க்கப்படுகிறது. முன்னர் முதலீடே தொழில்மீது ஆதிக்கஞ் செலுத்திவந்தது. ஆனால், போர்டு அதைத்தள்ளிவிட்டு உற்பத்தியை அந்த ஸ்தானத்தில் வைத்திருக்கிறார். அவர் குறிக்கோளாகக் கொண்டிருக்கும் உயரிய மோட்டார்கார், பொருள், எடைக்குறைவு, வேகம், விலைக் குறைவு ஆகிய சகல அம்சங்களிலும் உயர்ந்ததாக இருக்கவேண்டும். அதை உத்தேசித்தே அவர் பாடுபட்டு வருகிறார். இத்தகைய காரைத் தயாரிப்பதில் எவ்விதக் கஷ்டங்களும், இடையூறுகளும் எதிர்ப்பினும் அவர் அவற்றைச் சிறிதும் மதிக்கமாட்டார். அவரது நோக்கம் ஒரே நோக்கந்தான். தற்பொழுதுள்ள சமூகப் பொருளாதார நிலை திறமையான ஊழியத்துக்கு அனுமதியளிக்கத்தக்கதா யில்லை. பலர் அவர்கள் ஊழியத்துக்குத் தக்க பலனைப் பெற இங்கு இடமில்லை. பொருளாதாரத்திற்கு முக்கியமானது ஊழியம்தான். முதலாளிகட்குச் சொந்தமானது ஒன்றுமில்லை. பிறருடைய நன்மைக்காகவே அவர்கள் சொத்துக்களைத் திரட்டிப் பரிபாலித்துவருகின்றார்கள். "சோம்பேறிக்கு நாகரிகத்தில் இடமில்லை" என்று "எனது வாழ்க்கையும், ஊழியமும்" என்ற தமது நூலில் போர்டு குறித்திருக்கிறார்.

அவர் எழுதியிருக்கும் நூல்களிலெல்லாம் கூட்டுறவுத் தொழில் முறையையே சிறப்பித்திருக்கின்றார். 'சிரத்தையுடன் செய்யப்படும் எந்த வேலையும் கடினமானதன்று' என அவர் கூறுகிறார். அவரது உயர்ந்த ஊதியம், குறைந்த விலை முறையால் கார்களின் விற்பனை அதிகப்படுகிறது.

சென்ற மகாயுத்தத்தின்போது, இங்கிலாந்துக்கு ஹென்ரி போர்டு பேருதவி புரிந்தார். நீர் மூழ்கிக் கப்பல்களால் பெருத்த சேதம் மேற்பட்டுக்கொண்டிருக்கும்போது ஹென்ரி போர்டின் மோட்டார் வாகனங்கள் நல்ல ஊழியம் புரிந்தன. (Land and Life).

---

## மதுரை.

### பார்ப்பனரல்லாத இளைஞர் சங்கம்.

மகாசபை:—மேற்படி சங்கத்தின் மகா சபை ஸெப்டம்பர் கஅ-ம் தேதி புதன் கிழமை மாலை ரு கூ0 மணிக்கு டி சங்க நிலையத்தில் நடை பெற்றது. அவ்வமயம் ககஉக-கூ0 ம் வருஷத்திற்கு, திரு. எஸ். வி. சாமி பி. ஏ. பாரிஸ்டர்-அட்-லா தலைவராகவும், திரு. டி. நாராயணன் பி. ஏ. பி. எல்., திரு. எஸ். ஏ. எப். இப்ராஹிம் ஆகிய இருவரும் உப தலைவர்களாகவும், திரு எஸ். லட்சுமி ரதன் எம். ஏ. பி. எல்., பொதுக் காரியதரிசி யாகவும், திரு. ஜி. மாணிக்கம் பொக்கிஷதாராகவும் திரு. ஏ. எஸ். அருணாசலம் புத்தகசாலை பாதுகாப்பாளராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர் என உதவிக் காரியதரிசி அறிவிக்கிறார்.

## தேன்மாப்பட்டு.

(ஒரு நிருபர்)

புரட்டாசி ௫-உ

புறப்பாடு:—நமது வாசகசாலையில் கௌரவ காரியதரிசியாகவிருந்து தொண்டாற்றி வந்த திரு. அ. சோமசுந்தரன் அவர்கள் மலாய்நாடு செல்வதுபற்றி வாசகசாலை மெம்பர்களால் சென்ற சனிக்கிழமையன்று மாலை ஓர் சிற்றுண்டி விருந்து வழங்கி உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்கப் பட்டது.

தேர்தல்:—அன்று இரவு எட்டுமணிக்கு வாசகசாலையின் அங்கத்தினர்களின் கூட்டம் ஒன்று கூட்டப்பட்டது. அதில் திரு. ஆறு. முத்துராமன் அவர்கள் கவுரவ காரியதரிசியாகவும், திரு. அ. பெரியசாமி அவர்கள், திரு. மு. கணபதி அவர்கள் ஆகிய இருவர்களும் உதவிக் காரியதரிசிகளாகவும், மு. வெ. காசி விசுவநாதன் பொக்கிஷதாராகவும் ஏகமனதாய் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

நன்கொடை:—திரு. அ. சோமசுந்தரன் அவர்கள் ரூபா உ-ம், கறுப்பையா அவர்கள் தமது திருமணத்தை முன்னிட்டு ரூ உ-ம், திரு. அ. அருணாசலம் ரூ உ-ம் திரு. ராமசாமிக் கோன் ரூ க-ம் வாசகசாலைக்கு நன்கொடையாக வழங்கி யிருக்கின்றனர்.

போற்றுதல்:—கஙு-க-உக இரவு எ-மணிக்கு வாசகசாலை மெம்பர்களின் அவசரக் கூட்டமொன்று கூடி கீழ்க்கண்ட தீர்மானம் ஏகமனதாய் நிறைவேற்றப்பட்டது. திருப்பத்தூர் யூனியன் போர்டு மெம்பரும், உண்மை உழைப்பாளியும் பொதுஜனங்களால் நன்கு மதிக்கப் படுபவரும் பெருந்தகையாளருமான இவ்வூர் திரு. S. அப்பாவுபிள்ளை அவர்களை இவ்வூருக்கு முதன்முதலாக திருப்பத்தூர் பெஞ்சுக்கோர்ட்டுக்கு கௌரவ மாஜிஸ்திரேட்டாக காருண்ய கவர்ன்மெண்டார் நியமனம் செய்ததைக்கேட்டு இக்கூட்டம் சந்தோஷத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறது.

## ஆ. முத்துப்பட்டணம்.

நாவுக்கரசு நற்சபை:—இச் சபையின் நான்காவதாண்டு நான்காவது மாதக் கூட்டம் இம்மதி இரண்டாம் நாள் பிற்பகல் நான்கு மணிக்கு திரு. ராம. அழ. இராமசாமிச் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. கடவுள் வாழ்த்துக் கூறத் தலைவரின் முன்னுரைக்குப் பின் 'இளைஞர் முன்னேற்றம்', 'திண்ணைப் பள்ளிக்கூடமும், தேசியக் கலாசாலையும்', 'கல்வி' 'உழைப்பின் உயர்வு', 'ஒற்றுமை' என்ற பொருள்கள் பற்றி முறையே திருவாளர்களான சொ. புதூர், அழ. ராம. அருணாசலஞ் செட்டியார், லோகநாயகி வித்தியாசாலை மாணவரிருவர், இலக்குமிவரம் சொ. வி. ஆசிரியர் கி. சீனிவாசய்யங்கார், டி. பி. செகதீசையர், கம்பர் நிலையத் தலைவர் வெ. கிருஷ்ணமூர்த்தி ஐயர் முதலியவர்கள் சொற்பெருக் கிட்டார்கள். தலைவர் பின்னுரைக்குப் பின் சபை இரவு எழு மணிக்கு சந்தன தாம்பூல வந்தன வாழ்த்துடன் சிற்றுண்டியும் வழங்கப்பெற்று இனிது நிறைவெய்தியது. லோகநாயகி வித்தியாசாலை மாணவர்கள் பலரும் மற்றும் பல அறிஞர்களும் குழுமியிருந்தது குறிப்பிடத் தகுந்தது எனக் காரியதரிசி திரு. அழ. அரு. அறிவிக்கிறார்.

# நமது தபால் பெட்டி.

## வதுளைச் சைவபரிபாலன சங்கம்.

மூன்றுவதாண்டு விழா:—சென்ற ஆவணித் திங்கள் உகூ-ம் நாள், சனிக்கிழமை மாலை ரு-மணிக்கு பௌத்த ஆங்கிலக் கலாசாலை மண்டபத்தில் உயர்திரு. சுவாமி அவிநாசானந்தா அவர்கள் தலைமையில் வதுளைச் சைவபரிபாலன சங்கத்தின் மூன்றும் ஆண்டு நிறைவுவிழா நடைபெற்றது. தேவாரபாராயணத்துடன் விழா ஆரம்பமாயிற்று. காரியதரிசியால் அறிக்கை படிக்கப் பெற்றதும், சென்றவருட வரவு செலவு கணக்கு விபரங்கள் படிக்கப் பெற்றன, புது வருஷத்து உத்யோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். திரு. இ. பொ. செல்லையா அவர்கள் தலைவராகவும், திரு. கரு. வ. ஞானபண்டிதன் அவர்கள் அமைச்சராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஸ்ரீ கதிர்காம க்ஷேத்திரத்திலே நடக்கும் பாதகச் செயல்களை அறவே ஒழித்தற்கு ஊழியம் புரிய ஒரு தொண்டர் படை திரட்டுவதெனவும், இதற்கு அரசாங்க உதவியை நாடுவதெனவும், தீர்மானிக்கப்பெற்றது. கௌரவ கோ. நடேசய்யர் அவர்கள் சங்கமுன்னேற்றம் என்பது பற்றியும், வித்வான் திரு. நவநீத கிருஷ்ண பாரதியார் அவர்கள் சமூக முன்னேற்றம் என்பது பற்றியும், சுவாமி உருத்திர கோடீஸ்வரர் அவர்கள் சமய முன்னேற்றம் என்பது பற்றியும் சொற்பெருக்கிட்டார்கள்.

## சமரச சன்மார்க்க சங்கம்.

மூன்றும் ஆண்டு விழா:—இச்சங்கத்தின் ௩-வது ஆண்டு நிறைவு விழா ஸெப்டம்பர் கஎ, கஅ-ம் தேதிகளில் பழனியில் சிறப்பாக நடை பெற்றது. பழனி மலையப்ப சாமி நித்யானந்த வைத்தியசாலை பல மக்களுக்கு இலவசமாக வைத்திய உதவிசெய்தது பாராட்ட தக்கதென ஒரு அன்பர் அறிவிக்கிறார்.

## புதுவயல்.

ஸ்ரீசரஸ்வதி சங்கம்:—இச் சங்கத்தின் ஏழாவதாண்டு ஐந்தாமாதக்கூட்டம் நாளிது சுக்கில ஆண்டு புரட்டாசித் திங்கள் இரண்டாம் நாள் மாலை ௬ மணிக்கு ஊ. பெரி. பங்களாவில் திரு. கா. கிருஷ்ண சாஸ்திரியவர்கள் தலைமையில் நடைபெற்றது. தலைவரவர்கள் முகவுரை மொழிந்ததும் 'தொண்டர் கடமை, கற்றறிமூடர், பொறுமை, பக்தி, பருவத்தே பயிர் செய்' என்ற விடயங்களைப் பற்றி திருவாளர்கள் சோமசுந்தரச் செட்டியார், சங்கரநாமேஸ்வரன், இராமசாமி, ஸ்ரீநிவாசாச்சாரியார், அருணாசலன் ஆகியவர்கள் பேசினர். தலைவர்கள் முடிப்புரை மொழிந்ததும் வந்தன வாழ்த்துக்களுடன் சபை நன்கு நிறைவெய்தியது என சங்கத் தலைவர் அறிவிக்கிறார்.

## கோட்டையூர்.

மரணம்:—இரணியூர்க் கோவிலைச்சேர்ந்த திரு. அ. சி. அ. வீரப்ப செட்டியாரவர்கள் விஷஜுர ரோகமால் பீடிக்கப் பெற்று, புரட்டாசி முதல்நாள் திங்கட்கிழமை காலை ௯ மணிக்கு மரணமுற்றார் என ஓர் நிருபர் அறிவிக்கிறார்.









# பெண்கள் வேண்டுவது யாது?

## பெருமையன்று; சரிநிகர் சமானமே.

திரு. பொ. திரிகூடசுந்தரம் M. A. B. L.

உலகத்தில் உண்மையும் பொய்யும் உள்ளவரை மனிதருக்குள் உயர்வும் தாழ்வும் இருந்தே தீரும் என்பது நிச்சயம். உயர்வு தாழ்வு இல்லாமல் செய்துவிடலாம் என்று நினைப்பது ஒருநாளும் முடியாத காரியம். ஆனால் உயர்விலும் தாழ்விலும் உண்மையானதும் உண்டு, பொய்யானதும் உண்டு. என்றேனும் எவரேனும் எதிர்த்து இல்லாமல் செய்துவிட எண்ணினால் பொய்யான உயர்வு தாழ்வுக் கொள்கையையே எப்பொழுதும் அழிக்க முயலக் கடவர்.

உலகில் மனிதர் பிறப்பினால், நிறத்தினால், கல்வியால், செல்வத்தால் வல்லமையால் உயர்வுதாழ்வு கற்பிப்பது வழக்கமாக இருந்துகொண்டிருக்கின்றது. ஆனால் அங்ஙனம் உயர்வுதாழ்வுகள் உரைத்தல் முற்றிலும் தவறு. அக்காரணம்பற்றிக் கூறப்படும் உயர்வு தாழ்வுகள் எல்லாம் உண்மையானவையல்ல; பொய்யானவையே.

உயர்வுதாழ்வுக்கு மேற்கூறிய காரணங்கள் கூறுவதற்குரிய காரணம் வித்யாசம் வேறு, உயர்வு தாழ்வு வேறு என்பதையும், கூடுதல் குறைதல் வேறு, உயர்வு தாழ்வு வேறு என்பதையும் அறியாமையேயாகும். நிறம் வித்தியாசப் படலாம்; ஒருவன் வெள்ளையாகவும், மற்றொருவன் கறுப்பாகவும் இருக்கலாம். ஆனால் அவ் வித்தியாசம் உயர்வுதாழ்வுக்கு ஆதாரமாகாது. பிறப்பால் ஒருவன் நெட்டையாகவும், மற்றொருவன் குட்டையாகவும் காணப்படுவது அவர்களுக்குள் உயர்வுதாழ்வு கற்பிக்கப் போதிய காரணமாக மாட்டாது. அதுபோலவே கோவிலுக்கு அருகில் பிறந்தவன் உயர்ந்தவனாகவும், ஊருக்கு வெளியே பிறந்தவன் தாழ்ந்தவனாகவும் கருதப்படல் அறியாமையாகும்.

சிலர் கல்வியிலோ அல்லது உடம்பு பலத்திலோ, அல்லது செல்வச் சிறப்புகளிலோ மிகுதியாக உடையவராயிருந்தால் அக்காரணம் பற்றி அவர் குறைவாய்க் காணப் படுபவரைவிட உயர்ந்தவர் என்று கருதுவதும் மடமையாகும்.

மாமரமும் வாழைமரமும் வேறுபட்ட தன்மையுடையன என்பதில் சந்தேகமில்லை. ஆனால் வித்யாச உண்மையைக் காரணமாகக் கொண்டு யாரேனும் ஒன்றைவிட ஒன்று உயர்ந்தது என்று உரைப்பார் உளரோ? இரண்டு மரங்களும் சமமான அந்தஸ்துடையவைகளே.

நாழியைவிட மரக்கால் பெரியதே. மரக்கால் கொள்ளும் நெல்லின் அளவு நாழி கொள்வதைவிட அதிகமே. ஆனால் அக் காரணம்பற்றி யாரும் நாழி மரக்காலைவிடத் தாழ்ந்தது என்று கூறுவதிலர். மனிதனைவிட யானை அதிக பலமுடையது அதிக பருமனுடையது என்று கூறுவது வழக்கமேயன்றி யானை மனிதனைவிட உயர்ந்தது என்றுரைக்கும் வழக்கம் உண்டோ? வழக்க மில்லாவிடினும் அவ்விதம் உரைத்தால் அது உண்மையாகுமோ?

ஆகையால் தன்மை வேறுபாட்டையும், அளவு வித்தியாசத்தையும் ஆதாரமாகக் கொண்டு உயர்வு தாழ்வு உரைத்தல் பிழை என்பது தெளிவாகும். இவ்விரண்டு காரணங்களையும் வைத்து ஏற்றத்தாழ்ச்சி கற்பிக்கப் படுபவைகளில் ஆண் பெண் உயர்வு தாழ்வுக் கொள்கையும் ஒன்று. ஆணின் தன்மை வேறு, பெண்ணின் தன்மை வேறு. ஆண் வீரமுடையான், பெண் உறுதியுடையாள். ஆண் அறிவில் மிகுந்தவன், பெண் அன்பில் சிறந்தவள். பண்பு வேறுபட்டால் மாண்பு வேறுபடும் என்று கூறவேண்டியதில்லை. மனித வாழ்க்கைக்கு வீரம் வேண்டியதுபோலவே உறுதியும் தேவை; அறிவின் அவசியம் அன்பிற்கும் உண்டு. ஆணின் குணங்களும், பெண்ணின் குணங்களும் ஒன்று சேர்ந்தால்மட்டுமே உயர்ந்த மனித வாழ்வு உண்டாகும். ஆணும் பெண்ணும் தனித் திருந்தால் வாழ்வு ஒரு சிறகொடிந்த பறவையையே ஒக்கும்.

இவ்வுண்மை யறியாத "மிகப் படித்த" பெரியார்கள் கூட ஆணைவிடப் பெண் தாழ்ந்தவளே என்று பிதற்றி வருகின்றனர். இன்றியமையாத் தன்மையுடைய இருவரும் சம அந்தஸ்துடையவர்கள் என்பதை எள்ளளவும் எண்ணுவதிலர். ஆணுக்குப் பெண் சமானமாவது எங்ஙனம் என்று வினவுகின்றனர். பி. ஏ. பட்டம் பெற்ற சைவப்பெரியார் ஒருவர் சமீபத்தில் என்னிடம் ஆணும் பெண்ணும் சமம் என்றால் பெண் குழந்தை பெறவும் ஆண் கர்ப்பம் தரிக்காதிருக்கவும் காரணம் யாது என்று கேட்டார். அவர் கூற்றின் பொருள்என்ன? கர்ப்பந்தரித்துக் குழந்தை உயிர்த்தல் தாழ்ந்த காரியம். அதைச் செய்பவள் பெண்; அதனால் அவள் ஆணைவிடத் தாழ்ந்தவளே என்பதாகும். இவ்விஷயத்தை சற்று கவனித்தால் முதலாவதாக, குழந்தையைப் பெறும் காரியத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கு உள்ளதுபோல் பங்குண்டு என்பதும் இரண்டாவதாக, ஆணுக்கு சம்பந்தமில்லை என்றாலும் குழந்தையைப் பெறுதல் தாழ்ந்த காரியமன்று என்பதும் அறியலாகும். ஆகையால் பி. ஏ. படித்த பெரியார் கூறும் காரணம் ஆணைவிடப் பெண்ணைத்தாழ்த்திவிட முடியாததாகும்.

ஆணும் பெண்ணும் வாழ்க்கையின் லட்சியப் பேற்றிற்கு அத்யாவசியம். ஆதலால் இருவரும் ஒரேவித உயர்வுடையர். இவர் பெரியர் இவர் சிறியர் என்று இயம்புதல் இயலாது. இவ்வுண்மையை இளைஞரேனும் இதயத்தில் என்றும் போற்றுதல் கடன்.

இக்காலத்தில் இவ்விஷயத்தை எவரிடமேனும் கூறப்புகுந்தால் அவர் தற்கால முன்னேற்றத்தில் சேராதவராயிருப்பின் இது புது அபிப்பிராயம், பழந்தமிழர் கொள்கைக்கு விரோதமானது, பழந்தமிழரினும் நாம் அறிவு அதிகமாகப் படைத்தவர் என்றுகூறி நம்மை அடக்க முயல்வர். ஆனால் அவர் நம்மை அங்ஙனம் கூறி அடக்கிவிட இயலாது.

ஆண் பெண் சமத்துவக்கொள்கை முற்றிலும் நவீனம் என்றும் கூறிவிட முடியாது. முன்னாள் இருந்த பெரியாரிற் சிலர் இக்கொள்கையைச் சிறிதேனும் அறிந்தே இருந்திருக்கின்றனர் என்பது அவர்கள் செய்துள்ள நூல்களால் விளங்கும். அவற்றுள் மிகத்தெளிவாகக் காட்டுவது அறநெறிச்சாரமாகும். நாம் மேற்கூறியவாறு இல்வாழ்க்கைக்கு இருவரும் அவசியம் தேவையாவர்; ஒருவரால் அது நடைபெறாது என்று ஆசிரியர் முனைப்பாடியார் மொழிகின்றார்.

> மருவிய காதல் மனையாளும் தானும்
> இருவரும் பூண்டுய்ப்பி னல்லால்— [ஒருவரால்
> இல்வாழ்க்கை யென்னு மியல்புடைய [வான்சகடம்
> செல்லாது தெற்றிற்று நின்று

என்பது அவருடைய வாக்கு. கணவனும் மனைவியும் வண்டியில் பூட்டிய இரண்டு காளைகளை ஒப்பர்; இரண்டு காளைகளும் ஒருப்போல் இழுத்தால் மட்டுமே வண்டி தடையின்றிச் செல்லும். அதுபோல் இல்வாழ்க்கையென்னும் வானுலகு செல்லும் சகடமும் ஆணும் பெண்ணும் யாதொரு வித்யாசமுமின்றி இழுத்தால் மட்டுமே குறித்த லட்சியத்தைச்சேரும். வண்டியிழுக்க இரண்டு காளைகள் தேவை என்பதை மட்டும் எண்ணிவிட்டால் அவ்விரண்டும் சம அந்தஸ்துடையன என்பது எளிதில் விளங்கிவிடும். இரண்டும் இன்றியமையாதிருக்கும் பொழுது அவற்றுள் ஏற்றத்தாழ்ச்சி கூற முடியுமோ?

ஆனால் இந்த ஆண் பெண் சமத்துவக்கொள்கை இச்செய்யுளில் காணப்பட்டாலும் அவ்வாசிரியர் இயற்றியுள்ள இதர செய்யுள்களில் காணப்படவில்லை; உயர்வு தாழ்வுக் கொள்கையே காணப்படும். இதுபோலவே தான் அநேகமாக பண்டைய தமிழ் நூல்கள் எல்லாவற்றிலுமாகும். ஆணுக்குப் பெண் தாழ்வு; தாழ்வு என்பதுமட்டும் அன்று. ஆணுக்குள்ள உடைமைகளில் உரிமைகளில் பெண்ணும் ஒன்றுவள்; ஆணுக்குப் பெண் ஒருபொருள் அதாவது அடிமை என்பதே நமது மூதாதையர் அபிப்பிராயம். அவ்வபிப்பிராயமே இன்றுகாறும் அழியாது நின்றுவருகின்றது.

ஆண் பெண் சமத்துவ அபிப்பிராயம் நவீனம் என்று வைத்துக்கொள்வோம். அதுபோலவே நம்மைவிடப் பழந்தமிழர் அறிவு மிகப் பெற்றவர் என்பதையும் ஒப்புக் கொள்வோம். (வாதத்திற்கு ஒப்புக் கொள்கிறோமே யன்றி, உண்மையில் நாளுக்கு நாள் மனிதர் அறிவில் வளர்ச்சி யடைகின்றனர் என்னும் அபிப்பிராயமே நமதாகும்.) முன்னோர் முழுஅறிவுடையோர் என்றதினால் அவர்கள் தவறமாட்டார் என்று கூறமுடியுமோ? யானைக்கும் அடி சறுக்கும் என்பது பொய்மொழியன்றே? பழந்தமிழரில் பெரியாராகிய வள்ளுவரோ

> அரியகற் றாசற்றார் கண்ணும் [தெரியுங்கால்
> இன்மை யரிதே வெளிறு

என்ற எச்சரிக்கை எக்காலத்திற்குமாக இயம்பி நிற்பதைமறக்கலாமோ?

ஆகையால் பழந்தமிழர் ஆண் பெண் சம்பந்தமாய்க்கொண்டிருந்த எண்ணம் பிழையுடையது என்று தைரியமாய்க் கூறலாம். இதை மறக்க முடியாத சில நண்பர்கள், "ஆனால் நமது முன்னோர் பெண்களைத் தாழ்வாக நடத்தவில்லையே; உயர்வாகக் கருதி நடத்தவில்லையோ; முற்காலத்தில் பல பெண்கள் பெருங் கவிகளாகவும், ஞானிகளாகவும், வீரத்தாய்மாராகவும், போரசிகளாகவும், தெய்வத் தன்மையுடையவர்களாகவும்கூடக் கருதப்பட்டு ஜனங்களால் பலவிதத்திலும் போற்றப்படவில்லையோ" என்று கூறி விஷயமறியாது மயக்கப் பார்க்கின்றனர். அவர்கள் கூற்றிற்குச் சான்றாக ஔவையார், காரைக்காலம்மையார், மங்கையர்க் கரசியார், மங்கம்மாள், கண்ணகி, கோப்பெருந் தேவி போன்ற பலர் பெயரை நம் முன் குவித்து விடுவர்.

ஆனால் அங்ஙனம் ஆண்களால் பெருமை அளிக்கப்பட்ட பெண்களின் பெயர்கள் மலையாகக் குவிக்கப்பட்டாலும் அதைக்கண்டு நாம் மயங்கிவிடோம். பெண்கள் பெருமை பெற்றனர் என்பதைக் கொண்டு அவர்கள் ஆண்களைவிட அந்தஸ்தில் தாழ்ந்தவரல்லர் என்று நம்பிவிடோம்.

ஒரு பொருளைப் பெருமையாக நாம் கருதலாம். அதனால் அது நம்முடன் சம அந்தஸ்து அடைந்துவிட்டதாகக் கருதமுடியாது. நமது பசுவை நாம் பிறரிடம் பெருமையாகப் புகழ்ந்து பேசலாம். நாம் அதை நமது குழந்தையைவிட அதிகமாகப் பேணலாம். ஆனாலும் பசு நமது உடைமைமட்டுமே யாகும். அது மாடேயன்றி நம்மோடு சமமாகப் பாவிக்கக்கூடிய மனிதனாகாது.

அதுபோலவேதான் பெண்ணின் நிலைமையும், அவளுக்கு நம்மவர் அளித்துவருவதாகக் கூறப்படும் பெருமையும் ஆகும். பெண்ணைப் பெருமையாக மதித்ததனாலேயே பெண் ஆணுக்கு அடிமை அல்லள் என்று தீர்மானித்து விடமுடியாது. பெண்கள் வேண்டுவது பெருமையன்று; அது குணமுடையார்க்குத் தானாகவேவந்துசேரும். பிறர் பெருமைப் படுத்தத் தகுந்தவற்றைப் பெருமைப் படுத்தாதிருக்க ஒருநாளும் இயலாது. உண்மையில் பெருங்குணம் இருப்பவரைப் பிறர் புகழ்தலும் பெருமையாக எண்ணுதலும் அவர்க்கு இவர் அளிக்கும் தானமன்று; உரிமையேயாகும்.

பெண்கள் வேண்டுவது பெருமையன்று; ஆண்களோடு சம அந்தஸ்தேயாகும். அதுவும் அவர்களுக்குத் தானமாக அளிக்கப்படுவதை அவர் ஒருபொழுதும் விரும்பார். ஆண்களோடு பெண்கள் சமமாகக் கருதப்படல் பெண்களின் "பிறப்புரிமை" யாகும். ஆண்கள் அவ் வுரிமையை அவர்களுக்கு அளிக்கக் கடமைப்பட்டவராவர். ஆகையால் உண்மையில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையில் உயர்வுதாழ்வு உரைத்தல் அநீதியாகும். பிறப்பினால் உயர்வு தாழ்வு பிதற்றுதல் பேதைமை; அதுபோலவேதான் ஆண் பெண்ணைவிட உயர்வு என்று கூறுவதாகும். இவ்விரண்டுபேதைமைகளும்உலகைவிட்டு ஒழிதல் அத்யாவசியமாகும். ஒழிந்தால் மட்டுமே உண்மையான இன்பம் உண்டாகும். தமிழ்நாட்டு மக்கள் இவ் விஷயத்தில் சிரத்தை எடுத்துக் கொள்வார்களா? சிரத்தை எடுத்துக் கொண்டால், நண்பர்களே! நாம்

> மாதர் தம்மை யிழிவு செய்யு
> மடமையைக் கொளுத்துவோம்
> வைய வாழ்வு தன்னி லெந்த
> வகையிலும் நமக்குளே
> தாத ரென்ற நிலைமை மாறி
> யாண்களோடு பெண்களும்
> சரி நிகர் ஸமான மாக
> வாழ்வமிந்த நாட்டிலே.

வந்தேமாதரம்.

# அனார்க்கலி.

திரு. நாகேந்திரநாத் குப்தா.

மாதுளை மலர்! அழகிய பெயர்; அழகிய மாதினுக்கிடப்பட்டது. லாகூர் நகரம் ஒரு பெரிய ஞாபகச் சின்னமாக விளங்குகின்றது. பண்டை ஆரியர்கள் இப் புராதன நகரைச் சுற்றியே ஆதியில் குடியேறியிருக்கவேண்டும். ஆரிய வர்த்தத்தின் தலைநகரம் லாகூருக்குச் சமீபமாகவே இருந்திருக்கும். சரித்திர காலத்தில் மொகலாய ஆட்சியில் லாகூர் மிகவும் பேர்பெற்று விளங்கியது. லாகூரிலிருக்கும் கோட்டை மொகலாயருடைய ராணுவ ஸ்தலமாக விருந்தது. அதற்கப்பால் பாஞ்சால சிங்கம், மகாராஜா ரஞ்சித் சிங்கின் தலைநகராயிருந்தது. அவரது பூத உடம்பழிந்ததும் சாம்பல் லாகூர் கோட்டையின் முன்பு சமாதி வைக்கப்பட்டது. ரவி நதிக்கரையில் ஜெஹாங்கீர் சக்கிரவர்த்தி சமாதி வைக்கப்பட்டிருக்கிறார். அவரது மனைவியார் பேர்பெற்ற நூர்ஜஹான் சக்கிரவர்த்தினி அவருக்குப் பக்கலில் சமாதி வைக்கப்பட்டிருக்கிறார்.

கவிகளும், புலவர்களும், இந்தியாவிலுள்ள பலநகரங்களிலும், பட்டணங்களிலுமுள்ள கடைவீதிகளை வர்ணித்துக் கவிகள் இயற்றியிருக்கின்றனர். லாகூர் நகரிலுள்ள பெரிய கடைத்தெரு தப்பி பஸாராகும்.

எனினும், அனார்க்கலி பஸார்தான் மற்ற பஸார்களை விடப் பேர்பெற்றதாகும். முன்னால் இப்பகுதியில் பெண்கள் அதிகமாக குடியிருந்துவந்ததால் இதற்கு ஒரு கெட்ட பெயர் இருந்தது. லாகூர் முனிஸிபல் கமிட்டியில் லாலா லஜபதிராய் அங்கத்தவராய் இருந்தபொழுது, இந்த துரதிர்ஷ்டப் பெண்களை அனார்க்கலி பஸாரினின்றும் அப்புறப்படுத்துவதென ஓர் தீர்மானம் நிறைவேற்றினார். எனவே அவர்களெல்லாம் வேறெங்கோ போய்விட்டனர். ஓர் காலத்தில் மிகச் சிறப்புற்றோங்கிய தாழ்ந்த மாவினுக்கப்பால் அனார்க்கலியின் கல்லறை இருக்கின்றது. அது இன்றளவும் அரசாங்கப் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருக்கிறது. 'எனது காதலியை இன்னொரு முறை பார்ப்பேனாகில் இறப்பதுவரை ஆண்டவனுக்கு நன்றி செலுத்துவேன். அக்பர் புதல்வன் சலீம' என்ற பொருளுடைய சொற்கள் பாரஸீக மொழியில் அக்கல்லறையில் வரையப்பட்டிருக்கின்றன.

அனார்க்கலி யார்? மொகலாயர் காலத்திய சரித்திராசிரியர்கள் எவ்விடத்திலும் அவளைப் பற்றிக் குறிக்கவில்லை. அவளது வாழ்க்கைச் சரித்திரம் மறைவாகவே யிருக்கிறது. சாதாரணமாக வாய்ச் சொல்லால் கூறப்படும் கதை ஒன்றுக்கொன்று முரண்படுகின்றது. அக்பர் சக்கிரவர்த்தியின் அந்தப்புரத்தில் அவள் ஒரு அடிமைப் பெண்ணாக விருந்தாளென ஒரு கதை கூறுகின்றது. பின்னால் ஜெஹாங்கீர் என அழைக்கப்பட்ட ஸலீம் இளவரசர் அவள் மீது காதலுற்று அவளை மணக்க விரும்பினார். இதனால் அவள் திடீரெனக் கொல்லப்பட்டு சடங்கின்றிப் புதைக்கப்பட்டாள். அக்பர் இறந்தபிறகு அவளுடைய சமாதியின்மேல் இப்பொழுதிருக்கும் கல்லறை கட்டப்பட்டதென ஊகிக்கப்படுகின்றது. கல்லறையில் வரையப்பட்டிருப்பதிலிருந்து அதை எழுதியவர் இளவரசர் சலீம் என்பது விளங்குகின்றது. ஆனால் அதைச் சுற்றி மண்டபம் எழுப்பியவர் ஜஹாங்கீர் சக்கிரவர்த்தியாகும். அனார்க்கலி 'வீழ்க்கிவிழுந்த' சகோதரிகள் கூட்டத்தைச் சேர்ந்தவளென்றும், அவள் தனது தந்திரத்தால் சக்கிரவர்த்தியின் மகனைத் தன்மாட்டு ஈர்க்க முயற்சித்தனளென்றும், இதன் பயனால் அவள் உயிருடன் புதைக்கப்பட்டனளென்றும் மற்றொரு கதை கூறுகிறது. மாதுளை மலர் இளம்பருவத்தில் வாடி வதங்கி உதிர்ந்துவிட்டது. ஒரு கொடுஞ்சோக சரித்திரம் அவளுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது.

எனது நண்பர் ஒருவரது வீட்டில் கிரேட் ஈஸ்டர்ன் கார்ப்பரேஷனால் அனார்க்கலி சினிமாப்படக்காட்சி காட்டப்பட்டது. அக்காட்சியில் கண்ட கதை வருமாறு:— அனார்க்கலி ஒரு பாரஸீக வியாபாரியின் குமாரி. துரதிர்ஷ்ட வசத்தால் அவர் தமது குடும்பத்துடன் நாட்டைவிட்டு வெளியேறினார். இந்தியாவின் எல்லைப்புறத்தில் ஒரு கள்வர் கூட்டம் அவர்களைத் தாக்கியது. நாதிரா என்று அழைக்கப்பெற்ற அனார்க்கலி கள்வர் தலைவனால் கொள்ளப்பட்டாள். அவளுடைய தந்தையும் மற்றையோரும் அவன் வாளுக்கிரையாயினர். காபூல் தேசத்து கவர்னர் ராஜா மான்ஸிங்கால் நாதிரா மீட்கப்பட்டு, லாகூரிலிருந்த அக்பர் சக்கிரவர்த்தியிடம் அனுப்பப்பட்டாள். அவளது அழகு பெரிதும் போற்றப்பட்டு அனார்க்கலியென அழைக்கப்பட்டாள். அன்று முதல் அவள் சக்கிரவர்த்தியின் அந்தப்புரத்தில் வாழ்ந்து வந்தாள்.

அச்சமயத்தில் ஸலீம் வேறொரு அடிமைப் பெண்ணின் அன்பனாயிருந்தான். அனார்க்கலியின் அழகைக்கண்டதும் ஸலீம் அவள்மீது காதல்கொண்டான். எனினும் இது அவ்வளவு பெரிய விஷயமல்ல; ஆனால் ஸலீம் அனார்க்கலியை மணஞ்செய்ய முனைந்து நின்றான். இச்செய்தி அக்பருக்கெட்டியதும் அனார்க்கலி சிறையிலடைக்கப்பட்டாள். அவளைச் சிறையினின்றும் மீட்கும்படி ஸலீம் தனது அன்னையை எவ்வளவோ கெஞ்சிக்கேட்டபோதிலும் அவளால் ஒன்றுஞ் செய்யமுடியவில்லை எனவே, காவலர்களுக்கு லஞ்சங்கொடுத்து, ஸலீம் அனார்க்கலியைச் சிறையினின்றும் வெளியேற்றி, இருவருமாக ரவிநதியின்வழியாகத் தப்பியோடினர். விரைவில் இருவரும் பிடிக்கப்பட்டனர்; அனார்க்கலி உயிருடன் புதைக்கப்பட்டாள்.

சரித்திரத்தில் அனார்க்கலியைப்பற்றி எதுவும் குறிக்கப்படவில்லையாயினும், லாகூரிலுள்ள சிறந்த கடைவீதி அவள் பெயரால் அழைக்கப்பட்டு வருகிறது.

—'மாடர்ன் ரிவ்யு'

சுதேச கம்பெனிகளில் இன்ஷியூர் செய்யுங்கள்.

## பாரத் இன்ஷியூரன்ஸ் கம்பெனி (லிமிடெட்).

ஸ்தாபனம்:- **1896**] [ஹெட் ஆபீஸ்; லாகூர்]

| | | |
|---|---|---|
| புதிதாக சேர்ந்த புள்ளிகளுக்கு இன்ஷியூரன்ஸ் அளிக்கப்பட்ட தொகை. | 1925-ம் வருஷம் ரூ. 73,00,000<br>1926 ,, ,, 124,00,000<br>1927 ,, ,, 151,00,000 | "பாரத்தில்" ஜனங்கள் அதிகமாய் சேருகிறதின் அத்தாக்ஷி. |

லாபம் :—வருஷம் ஒன்றுக்கு 1000-க்கு இன்ஷியூர் செய்தவர்களுக்கு ரூ. 20 வீதம் கொடுக்கப்பட்டுவருகிறது. சுத்த இந்திய நிர்வாகத்திற்குட்பட்டு மென்மேலும் விருத்தியாகிவரும் பழமையான தேசிய கம்பெனியாகிய "பாரத்தில்" வருஷந்தோறும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் இன்ஷியூர் செய்து அதன் பலனை அடைகிறார்கள். அதுபோல் நீங்களும் எங்கள் கம்பெனியின் ரூல்ஸ்களில் மற்ற கம்பெனி ரூல்களைப் பார்க்கில் நாங்கள் அளிக்கும் அனுகூலங்களை கவனித்து இன்ஷியூர் செய்யுங்கள்.

மற்ற விபரங்களுக்கும் எழுதவும். (593)

V. RAMACHANDRIER, Agent, Pudukotta.
S. GANESAN, Organiser, 46 Kamatchi Josier St. Kumbakonam.
கிளை ஆபீஸ், மதுரை: —or G. RENGASAMI, Secretary, 13, North Veli Street, Madura.

---

கியாட்லாக் இனாம். **Catalogue Free.**

## —சுதேசி கைத்தொழிலை—
## ஆதரியுங்கள்.




எல்லாவித கட்டிடங்களுக்கும் ஏற்றவாறு அநேக தினுசு இரும்புக் கிராதிகள், ஸ்பிரிங் கதவுகள், சுருள் கதவுகள், பூட்டுகள், தாப்பாள்கள் முதலிய இரும்புச் சாமான்கள்

மிகவும் உறுதியாயும் எவ்விதத்திலும் உடையாததாயும் அழகாயும், பார்வையாகவும் தயார் செய்து விலை சரசமாக ஏராளமாய் விற்பனைசெய்து வருகிறோம். நூதன தினுசுகள் தேவையானால், குறித்த தினத்தில் தயார் செய்து கொடுக்கப்படும்.

**மகாலக்ஷ்மி இரும்புத் தொழிற்சாலை,**

(576) P. N. இராஜகோபாலய்யர். மதுரை.

வியாபாரத்திற்கழகு விளம்பரமே.

---

## இன்ப வாழ்வு.

ஐசுவரியத்தால் மாத்திரம் ஏற்படுவதில்லை. தைரியம், ஆரோக்யம், சந்தானம் இவைகளே இன்ப வாழ்விற்கு முக்கிய சாதனங்கள்.

இரத்தத்தை விருத்தி செய்து நரம்புத் தளர்ச்சியை போக்கி ஆரோக திடகாத்திரர்களாகவும் கெர்ப்ப கோளாறுகளை நீக்கி சந்தான பாக்கியத்தையும் கொடுக்கவல்ல ஆண் பெண் யாவரும் உட்கொள்ளக் கூடிய நம் பொது ஜனமித்திரனாக பாவிக்கப்படும்.

## ஜீவஸுதா

என்னும் மருந்தின் பலத்தை நீங்களும் அடைந்து இன்ப வாழ்வு நடத்த வேண்டாமா? இன்றே வாங்குங்கள்.

விலை 1 புட்டி ரூ. 2—8—0.

**ஸ்ரீநிவாஸ் அண் கோ.,**

(592) புதுக்கோட்டை.

---



இனி வீண் செலவு வேண்டாம்.

**என் ?** இதர தேசங்களால் புகழப் பெற்ற

## நியோடைமன் கமலம்.

கட்டிடத்தில் உறுதியும் பூரிப்பும் பிரகாசமு கொண்டது. காரட் ரூ-5.ம் முதல் ரூ. 10. சாட்லாக் இனாம். அசல் பவுன் தங்கத்தில் கட்டிய நகைகளும் தயார்.

ஆர்டிபிஷல் நியோ டைமன் கோ,
(602) 425, தங்கசாலை வீதி, மதராஸ்.

---

## இரும்புப் பெட்டிகள்.

உங்களுடைய விலைபெற்ற பொருள்களைப் பத்திரப்படுத்துவதற்கு அதற்கு சரியான இரும்புப் பெட்டி ஒன்று அவசியமல்லவா? எங்களால் கனத்த தகட்டில் செய்யப்பெற்ற கெட்டியான இரும்புப் பெட்டிகள் அழகான வர்ணம் வைக்கப்பெற்றுத் தயாரிலிருக்கின்றன. அதில் ஒன்று வாங்கிவிட்டீர்களானால் திருட்டுக்கும் நெருப்பிற்கும் பயமில்லை.



**மு. அ. & அ. நா. அ.**

இராமசாமி செட்டியார் கம்பெனி,
2/70, பிராட்வே சென்னை

கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும்:—

அ. நா. அ. கடை சப்போ, அ. வீ. ர. தெ. உடுமலைப்பேட்டை,
(574) வயி. ராம. அரு. கடை ரெங்கன், அ. கா. அ. வீடு கண்டனூர்.

---



இது வரையில் தமிழில் வெளிவராத
"மோட்டார்கார் இயந்திர சாஸ்திரமும்"
அதன்
"அநுபோகப் பயிற்சி முறையும்"
(அப்டோன் படங்களுடன்)

(தபால் சார்ஜ் வேறு) விலை ரூபா 1—8—0

சிலோன், பினாங்கு, மலாக்கா முதலிய வெளிநாட்டு ஆர்டர்களுக்கு முன் பணம் அனுப்பவேண்டும். எஜெண்டுகளும் தேவை மற்ற விபரங்களுக்கு எழுதவும்.

மோட்டார் பாடசாலை (ESTD, 1916)

மூன்று மாதத்தில் மோட்டார் ஓட்ட கற்றுக் கொள்ளலாம்

மோட்டார் வண்டிகளை ஓட்டவும் பிரிக்கவும் பூட்டவும் கற்றுக்கொடுக்கப்படும். தேர்ச்சியடைந்தபின் கவர்மெண்ட் லைசென்ஸ் வாங்கிக் கொடுக்கப்படும். மற்ற விபரத்திற்கு எழுதவும்.

மதரூஸ் இந்தியா மோட்டார் இஞ்ஜினீரிங் ஒர்க்ஸ்,
(596) மைலாப்பூர், சென்னை.

---

## விளம்பரம்.

எங்கள் நெசவுசாலையில் கைதேர்ந்த நெசவுகாரர்களால் தயார் செய்யப்பட்ட தினுசுகளின் விபரம்.

- No. 1 3 முழம் முதல் 6 முழம் வரை பலவித கரைகள் போடப்பட்ட டைமன் துண்டு தினுசுகள்.
- No. 2 பலவித கசமீஸ் பலவித டிசைன் வைத்த சில்க்கு ஷர்ட்டிங் பீஸ்கள்
- No. 3 100 நிர். துப்பி $2\frac{3}{4}$ அகலம் 5 முழம் நீளம் உள்ள பலவித கரைகள் பலவித குறிகள் போடப்பட்ட துப்பட்டா தினுசுகள்.
- No. 4 100 நிர். 3 வீதி அகலம் 8 முழம் நீட்டம் பலவித கரைகளும் பலவித குறிகள் போடப்பட்ட வேஷ்டி தினுசுகள்.
- No 5 அவரவர்கள் விலாசம் போட்ட ஜரிகை அங்கவஸ்திரம் ஆர்டர் பேரில் தயாராய் செய்துகொடுக்கப்படும்.
- No. 6 தனவணிகர்களுக்கு வேண்டிய இடுப்பில் கட்டும் அரக்கு பட்டு சவர். தினுசுகள் தேவையானவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கு ஆர்டர்கள் அனுப்பும்படிக் கோருகிறோம்.

M. ரூமனுதன் & பிரதர்ஸ்,
கடகுறுஜா நெசவுச்சாலை,
(573) நசியனூர் பேட்டை. S. I. Ry.

